


சுபானு ஸு
ஐப்பசிமீ

விலை அணா 6

OCTOBER
1943



# THE BHARATA MANI, MADRAS

*Editor* : K. S. VENKATARAMANI

# திருப்தி, அமைதி



ஒரு கப் டீ அருந்தியவுடன்.
கேட்பானேன், நரஸூஸ் டீ
தான்! நல்ல காபி, டீயை
அனுபவிக்க அறிந்தவர்
கள் நரஸூஸ் காபி, டீ
யையே விரும்புகிருர்கள்
நரஸூஸ்
இந்தியத்தயாரிப்பில் தலைசிறந்தது
நரஸூஸ் மான்யுபாக்சரிங் கம்பெனி,
சேலம் • தென்னிந்தியா




மாத வெளியீடு

ஆசிரியர் :
கா. சி. வேங்கடரமணி

காரியாலயம் :
34, அலமேலுமங்காபுரம், மயிலாப்பூர், சென்னை

வருட சந்தா ரூபா 3

தனிப்பிரதி அணா 6

| மாலை 10 | OCTOBER 1943 : : சுபானு௵ ஐப்பசி௴ | முத்து 4 |
|---|---|---|

## பொருளடக்கம்

# TRAVANCORE
# INFORMATION & LISTENER

*(Official Organ of the Government of Travancore and the Travancore Radio)*

The Editor solicits contributions on topics of general Travancore interest, in particular on subjects relating to the State, having historical, archeological, industrial, agricultural or travel significance. Short stories and articles on topical subjects are also invited.

If your have any photographs of Travancore interest send them too.

Have you a Sales Message for Travancore's Six Millions? If you have, tell it through the " Travancore Information and Listener ". Rate Cards on application.

---

*Address all communication to* :


The Editor,

THE TRAVANCORE INFORMATION AND LISTENER,

*Department of Information,*

*Huzur Cutcherry, Trivandrum.*




“போகிற போக்கில்” எழுதி ஆறு மாதம் ஆகிறது. அதுவும், அரசியலைப்பற்றி எழுதி ஒரு வருஷத்திற்குமேல் ஆகிறது. மகாத்மாஜியின் சிறைவாசத்திற்காகத் துக்கம் கொண்டாடி மௌன விரதம் கொண்டேன். அதனால் விடுதலை பெற முடியுமா? மௌனத்தால், அதுவும் தபஸில்லாத மௌனத்தால், நவீன நாகரிகத்தில் எந்த நிர்மாண வேலையைச் செய்யமுடியும்? இந்தப் புது உணர்ச்சியுடன் மறுபடியும் “போகிற போக்கிலே”யும், என் அரசியல் கட்டுரைகளும் திரும்பப் “பாரத மணி”யில் எழுத ஆரம்பித்திருக்கிறேன். சொல், செயலை ஊட்டி வளர்த்து, விடுதலையும் வெற்றியும் நமக்கு அளிக்கவேண்டும்.

சென்ற நவராத்திரியோடு பாரத மணிக்கு ஐந்தாவது ஆண்டு பூர்த்தியாகிறது. இடியிலும் புயற்காற்றிலும் அன்ன விசாரத்திலும் இந்த மகா யுத்தத்தோடு பிறந்து வளர்ந்த ஓர் ஏழைக் குடியானவன் குழந்தை, பாரதமணி. யுத்தத்தில் உழவனுக்கு என்ன பரிசு? என்ன லாபம்? ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டு போனாலும் சிலர் நக்கிக் குடிக்கத்தானே வேண்டும்? இரும்பு வியாபாரி, சைனியக் கண்ட்ராக்டர் இவர்களைச் சார்ந்து யுத்த காலத்தில் பிறக்கவேணும்; அல்லது ஸ்வீகாரம் புகவேணும். ஏழைக் குடியானவனின் துன்பமும் துயரமும் யாருக்கு வேணும்? யுத்தத்தில் தியாகத்திற்குப் பிறந்தோர் பலர்; யோகத்திற்குப் பிறந்தோர் சிலர்! நவீன நாகரிகம் என்ற அமைப்பு, வியாபாரக் குட்டையில் பிறந்த அல்லிப்பூவாய் இருக்கிறதே! படர்ந்து, நீர்ப்போக்கைத் தடுக்கும் வெங்காயப் பூண்டாய் இருக்கிறதே! இதைக் களைந்துவிட்டு, என்றைத் தினம் நாம் உயர்ந்த தாமரைக் கொடியை நாட்டுவோம்?

* • *

இம்மாதிரி, வழக்கம்போல் வீண் சிந்தனைகளில் ஆழ்ந்து, மாயவரம் ரயிலடியில் ரயிலோட்டத்தை வியந்து பார்த்துக்கொண்டிருந்தேன். சிந்தனைக்கு உதவியான ஏகாந்தமான இடங்களில் ஒன்று ரயில்வே ஸ்டேஷன்: ரயில் வரும் சமயத்தில் மாத்திரம் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!

ஹிக்கின் பாதம் புக்ஸ்டால் பக்கத்தில் ஒரு பழைய நண்பர் நாணு என்ற கோமல் நாராணசாமி ஐயரைக் கண்டேன். அவரும் நானும் ‘கிருஷ்ணராவ் கிளாஸி’ல் சேர்ந்து வாசித்தோம். கிருஷ்ணராவ் பேர்போனவர். சொல்லிக் கொடுப்பதிலில்லை. ஆறு அடி உயரம், வளர்ந்த கறுப்பு மீசை, காலையிலும், மாலையிலும் காவேரிப் பாலத்தின்மேல் நின்றுகொண்டு ‘பாராசூட்டி’லிருந்து இறங்கினவர்போல், அழகாய்க் காவேரியில் குதித்து நீர்வீழ்ச்சிபோல் வெள்ளத்தை வாரி இறைத்து, குளிக்கும் பெண்மணிகளின் வாரிப் பின்னிய தலைமயிரை - அந்த நாளில் வாரிப் பின்னிக்கொள்வது உண்டு - நனைத்து, அவர்

கள் முகங்களைச் சிவக்கச் செய்வதில் பேர்போனவர். நாணு, இந்த விஷயத்தில் குருவுக்கு மிஞ்சிய சிஷ்யர். ஏட்டுப் பூச்சியான நாங்கள் நாணுவைப் பார்த்துக் கொண்டாடுவது வழக்கம்.

அந்த நாணுவைப் பல வருஷங்கள் கழித்து இப்பொழுது ஹிக்கின் பாதம் புஸ்தகக் கடையில் கண்டேன். ஆனால் இதற்குமுன் அவரைப்பற்றிக் கதைகள் கேட்டிருக்கிறேன். இளம்பிராயத்தில் ஐந்து வருஷம் அத்யயனம் செய்து விட்டு - அதனால்தான் அவர் குரலில் ஒரு தெளிவும், வசீகர சத்தியும் - பிறகு ஆங்கிலப் பள்ளி புகுந்து 'மெட்ரிக்யுலேஷன்' "ப்ளக்" போட்டு விட்டு, உலக யுத்த நெ. 1-ல் மெஸ் பாட் எகிப்து போய், ஏராளமாய்த் திரவியத்தைச் சேர்த்து, பொன்னோடு பெண்ணையும் லாபமாக அடைந்து-மாதா ஹரி (Mata Hari) போன்ற அழகு வாய்ந்த ஒரு வேவுச் சிறுமியைத் தாம் காந்தர்வ விவாகம் செய்துகொண்டு வடஇந்தியாவில் பல இடங்களில் சுகமாய் வாழ்ந்து, தெய்வாதீனமாய் அவளை இழந்து, வாழ்வில் சுவை இழந்து, சமீபத்தில் தம் சொந்தத் தாலுகா ஊராகிய மாயவரத்திலே காவேரி யோரத்தில் ஒரு சிறு "குருவி பங்களா"க் கட்டிக்கொண்டு யோகாப் பியாசத்தில் ஆர்வம் உள்ளவராய்க் காலத்தைக் கழித்து வந்தார்.

நாங்கள் இருவரும் கொஞ்ச நேரம் பழைய ஞாபகங்களை நெரடிப் பார்த்து மாயவரம் டவுனுக்குத் திரும்ப ஒரு ஜட்காவண்டி பார்த்தோம். மாயவரம் ஜட்காவண்டி, 'கிருஷ்ண ராவை' விடப் பிரசித்தம். வண்டிக்காரனைப் பற்றிக் கேட்க வேண்டாம். வடிகட்டின சல்லிப் பேச்சு. "கொள்ளு விலை ஜாஸ்தியாய் விட்டது, எசமான்! ஒரு ரூபா வேணும்" என்று கேட்டான். மாயவரம் குதிரைகளுக்குக் கொள்ளு வைக்கிறார்கள் என்று நான் அன்றைய தினம் தெரிந்துகொண்டேன்.

"காவேரிக்கரையோடு நடந்து போவோம், மணி! மகாத்மாகாந்தி, "மாயவரம் காவேரிக்கரை போன்ற கக்கூஸ் பூலோகத்தில் இல்லை" என்று சொன்னாரே — அது இப்பொழுதும் அப்படியே யிருக்கிறதா என்று பார்ப்போம். மாயவரம் ஜட்கா வண்டிக்குக் கொடுக்கும் பணம் மகா பாபம்: கள்ளுக்கடை போய்ச் சேரும்! நடந்து போவோம்; பேசிக்கொண்டு போவோம்."

"சரி! இரட்டைச் சந்தோஷம்" என்று சொன்னேன். தவிர, யார் இந்த ஜட்காச் சத்தத்தைக் கொடுப்பது என்ற பிரச்னையும் இந்தியக் காரியதரிசி அமெரியின் ஒத்தாசையில்லாமல் தீர்ந்துவிடும் என்று எண்ணினேன்.

"மணி, உன்னைப்பற்றி நான் விசாரித்துகொண்டே வருகிறேன். சில வருஷங்களுக்குமுன், நான் உன்னை டில்லியில் ஒரு தடவை பார்த்தேன்— புராண கிலாவில் (பாண்டவர் கோட்டை) ஏகாந்தமாய் உட்கார்ந்து மனக் கனவு கண்டுகொண்டிருந்தாய். நாங்கள்—அப்பொழுது அவள் இருந்தாள்- உன் நிஷ்டையைக் கலைக்க இஷ்டப்பட வில்லை. இப்பொழுது என்ன செய்து கொண்டிருக்கிறாய்? மணி!—பாரதமணியைத் தவிர. ஐந்து வருஷம் ஆகியும் அதற்குள்ளவளர்ச்சியையும்,ஆடம்பரத்தையும் ஜனங்கள் பாரதமணியில் காண வில்லையே! இந்த யுத்தத்தில் கரை புரண்டு வரும் செல்வப் பெருக்கில் கூட உன் பத்திரிகை வளரவில்லையென்றால், நீ பத்திரிகையே நடத்தவேண்டாம்! 'காற்றுள்ள போதே தூற்றிக் கொள்'ளவேண்டாமா? இரும்புச்சாமான் களுக்கு அடுத்தபடி பத்திரிகைகள் தானே, நெசவுமில்கள்போல இந்த யுத்தத்தில் ஏராள லாபத்தை அடைகின்றன? பேபர் மூலமாய்த்தானே சகல வெற்றி,சுக லாபங்கள்? நாணயமே, லட்சுமியே, பேபர் ரூபத்தில்தானே குடியிருந்து வருகிறாள்! இந்தச் சமயத்திலா குக்கிராமத்தில் இருக்கிறது; குட்டையில் ஊறும் மட்டைபோல் ஊறுகிறது? இப்பொழுதல்லவோ உன்னைப் போலொத்தவர்கள் சென்னை போய்

ஒரு கை பார்க்கவேணும்? நம்ம கிராமங்கள் ஜலமில்லாத பாழடைந்த கிணற்றுக்குச் சமம். நீ எவ்வளவு முயற்சி எடுத்துச் செம்பையும் தாம்புக் கயிற்றையும் விட்டுப் பார்த்தாலும் ஒரு உத்தரணி ஜலம்கூடக் கிடைக்காது! தவளை வசிக்கக்கூட நீரில்லை. நமது கிராமத்தை யெல்லாம் இனிமேல் புது முறையில் நிர்மாணம் செய்தாக வேணும். புதுச் சூருவளிச் சட்டம் அமைத்துப் புதுக்கிணறுதான் வெட்ட வேணும். பழங் கிணற்றில் துரு வாரி நன்னீர் காணமுடியாது. வேலை செய்யச் செய்யப் பழைய கிணறு இடிந்து கொண்டே வரும். இந்த ஸ்திதியில்தான் நம்ம கிராமங்கள் இருக்கின்றன. புதுப்பிக்கப் பணம் வேணும்; மனம் வேணும். பணம் கிராமத்தில் கிடையாது. நகரம் போய்ப் பணம் சம்பாதித்துக் கொண்டு வா: பண்டாரச் சன்னிதிக்கு மேல் உனக்கும் எல்லாம் நடக்கும்படியாய் நான் செய்கிறேன்.

இந்த உலகமறிந்த முறையில் பேசிக் கொண்டு வந்தார் எனது நண்பர் நாணு. மாயவரம் ரயிலடிக் காவேரிப் பாலத்திலிருந்து டவுனை நோக்கிக் காவேரிக் கரையோரமாய் மெல்ல நடந்து பேசிக் கொண்டு வந்தோம்.

சுழலிட்டு ஓடும் காவேரியை இமை கொட்டாமல் நான் பார்த்துக் களித்து, இவர் பேச்சின் இசையில் லயித்து வந்தேன். நாணு, அலுக்காமல் பூக்காரன் பூவைத் தொடுப்பதுபோல் அழகாய்ச் சொல்லை நகைச்சுவையுடன் தொடுத்து வந்தார். இவர் சொல்லில் பொடி, மெருகு, தொனி எல்லாம் கலந்து நின்றன. காவேரி தீரத்திலே திண்ணைப் பேச்சில் ஊறின வம்சத்தில் ஜனித்தவர். கேட்கவேணுமா? ஒவ்வொரு சொல்லும் பன்னீர் தெளித்த புஷ்பம் போல் பரிமளித்தது.

* * *

இப்படியே நாங்கள் இருவரும் பேசிக்கொண்டு இரண்டு மைல் நடந்து டவுன் பாலத்தடிப் படித்துறைக்கு வந்து சேர்ந்தோம். சந்தியாகாலம். நாற்பது வருஷங்களுக்கு முன்னே நான் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்தபோது, இந்தப் படித்துறையில் காலையிலும் மாலையிலும் நீந்தி விளையாடி எனக்குள்ளேயே பாடிக் களித்த அந்த ஞாபகங்களெல்லாம் வந்தன. அப்போதைக்கு இப்போது எவ்வளவு மாறுதல்களைக் கண்டேன், இந்தப் படித்துறையில்! அந்திப் பொழுதில் சாந்தமும் சிவமும் ஜபமும் குடி கொண்டு நிற்கும். நான் இப்பொழுது கண்ட காட்சியோ? ஒரு புல்லுக் கட்டுக்காரி காய்ந்த புல்லை அலம்பிப் பசுமையாக்கிக் கட்டுக் கட்டிக்கொண்டிருந்தாள்-நாங்கள் ரயிலடியில் பார்த்த குதிரைக்கு என்று நினைக்கிறேன். ஒருவன் தன் அழுக்கு வேஷ்டியைச் சோப்புப் போட்டுத் தோய்த்து, எங்கும் சோப்பு நுரையை வாரி இறைத்துக் கொண்டிருந்தான். தன் வேஷ்டி வெளுத்ததோ இல்லையோ, படித்துறை அசுத்தமாயிற்று. மற்றொருவன் ஆங்கிலம் படித்தவன்போல் தோன்றிற்று. தன் முகத்தை அலம்பி அலம்பித், தன் மூக்கைச் சிந்தி நீரில் எறிந்துகொண்டு எச்சிலைக் காறி அங்குமிங்கும் துப்பிக் கொண்டிருந்தான். சுகாதாரத்திற்கும் மேன்மையான வாழ்விற்கும் அடிப்படையான பழைய சம்பிரதாயங்களும் கட்டுப்பாடுகளும் இவ்வளவு அடியோடு மாறிவிட்டதே!-என்று விசனித்தேன்.

சாந்தமான வேளை; அஸ்தமன வேளை. பழைய ஞாபகத்தை ஒட்டி, நாணுவது இந்தப் படித்துறையில் விச்வநாத சுவாமி ஸந்நிதியில் என் சந்தியாவந்தனத்தை இன்றைய தினமாவது பூர்ணமாய்ச் செய்துமுடிக்கலாம் என்று துவக்கினேன்.

நாணுவோ, பாலத்தின்மேல் செல்லும் ஜனக் கூட்டத்தைப் பார்த்துக் கொண்டு காவற் சிப்பாய்போல் அசங்காமல் என் பக்கத்தில் நின்றார். ஜபத்தை முடித்துக்கொண்டு ஈசனைப் பிரார்த்தித்தேன். நாணுவைப் பார்த்து நான், "நானும் அப்படித்தான் நினைக்கிறேன், நாணு! என் ஐந்து வருஷப்

பாடும், தபஸ் இல்லாததால் சமுத்திரத்தில் கரைத்த பெருங்காயம்போல் வீணாய்ப் போய்விட்டது ! அச்சும் சக்கரமும் இல்லாத பாரதமணி குக்கிராம உளையில் பார் வரையில் அழுந்திவிடும் போல் இருக்கிறது : பிறகு இழுக்க முடியாது. யுத்தத்திற்காக நன்றாய்க் கப்பியும் தாரும் போட்ட சென்னை மவுண்ட்ரோட்டுக்கே, நீ சொன்ன படியே, பாரதமணியைக் கொண்டு போகிறேன். பாரதமணியின் ஆறுவது ஆயுஷ்ய ஓமம் கூவம் நதிக்கரையில் நடக்கட்டும்; தான் பிறந்த இடத்திலேயே நடக்கட்டும்.

கூவமே காவேரியாகட்டுமே; மயிலாப்பூரே ஒரு குக்கிராமந்தானே!- என்று ஒரு வக்கீல் வாதம் செய்யும் முறையில் பேசி முடித்தேன். தீர்மானத்தையும், சாந்தத்தையும் அந்தப் பழைய படித்துறையிலேயே அடைந்தேன். கோவில் மணி அடித்தது. காவேரி அம்மன் சுழன்று சுழன்று, எங்களை அநுக்கிரகம் செய்து அனுப்பும் பார்வையால் பார்த்துவிட்டுப் பாலத்திற்குள் புகுந்து கடலைத் தேடி விரைந்தாள்.

* * *

இந்த ஐப்பசி மாதம் முதல் பாரத மணி மயிலாப்பூரிலிருந்து வெளிவரும். அதற்கு ஈசன் புத்துயிர் அளிக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். நான் எண்ணிய திட்டம்போல் இப்பொழுதாவது நடத்த மறுபடியும் முயலுகிறேன். அறிவைப் போற்றும் கட்டுரைகளே பாரதமணியின் முக்கிய லட்சியம். அறிவின் மூலம்தான் செயல் பெருகும். இப்படிச் செயல் பெருகினால் தான், நமது நாட்டிற்குச் சுயேச்சையும், சுயராஜ்யமும் க்ஷேமமும் கிடைக்கும். ஆகையால் நாம் தற்சமயத்தில் இந்த முறைகளைத்தான் ஏகோபித்துக் கையாள வேண்டும்.

அரசியல், பொருளாதார விஷயங்களிலே நாம் இன்னும் கூர்மையாய் ஆராய்ச்சிசெய்து, அதற்கு வேண்டிய சட்டத் திட்டங்களைத் தயார்செய்து செயலாக்கிக் கொள்ளவேண்டும்.

அடிமை நாட்டில் அரசியல் ஏது ? - என்பது உண்மைதான். ஆனாலும் அடிமை நாட்டில் விடுதலைபெறும் அரசியலைத் தவிர வாழ்வில் வேறென்ன லட்சியந்தான் இருக்கிறது ? கிணற்றில் விழுந்து மூச்சுப்போன பெண்மணிக்கு மூச்சு வந்த பிறகுதானே அடிபட்ட காயத்திற்குச் சிகிச்சை செய்ய வேண்டும் ; கலைந்த தலைமயிரை வாரிப் பின்னிப் பூக்களால் அலங்கரிக்க முயல வேண்டும்? சுயேச்சை, வாழ்வுக்கு உயிர். சுயேச்சை, கவிதைக்கு உயிர். அடிமைத்தனம் விலகும் வரையில் உண்மையான கவிதை ஏது? கீதம் ஏது ? இலக்கியம் ஏது ?

மணி



# கலைமகள்

[பி. ஸ்ரீ.]

இயற்கையன்னை - அண்ட கோடிகளை ஈன்றெடுத்து உயிர்களை யெல்லாம் ஊட்டி வளர்க்கும் தேவி - உமாதேவியாகவும் லட்சுமிதேவியாகவும் சரஸ்வதி தேவியாகவும் பூஜிக்கப்படுகிறாள். பார்வதி தேவியை மலைமகளென்றும், மஹாலட்சுமியை அலைமகளென்றும் சொல்லுவதுபோல், வித்தையின் வடிவமாகிய சரஸ்வதியைக் கலைமகள் என்று சொல்லுகிறோம்.

இயற்கையன்னையின் அம்சங்களான இம்மூன்று தேவியரைக் குறித்தும் நவராத்திரி காலத்தில் அம்மன் கோலு என்ற பெயரால் அழகிய பொம்மைக் கொலு வைத்து ஆனந்தமாகப் பாட்டுப் பாடிப் பூஜைகள் நடத்துவதில் நமது ஸ்திரீகளுக்கு விசேஷ திருப்தியும் உத்ஸாகமும் உண்டு. இத்தகைய நவராத்திரி பண்டிகையில் மஹா நவமியன்று சரஸ்வதி பூஜை என்ற கலைமகள் விழா குதூகலமாய்க் கொண்டாடப்படுகிறது.

## கலைமகளின் வடிவம்

கலைமகளின் வெண்ணிறமும் உருவ அமைப்பும் இந்துக்களுக்குச் சில உண்மைகளை வெளியிடுகின்றன. இந்தத் தேவியின் சுத்தமான ஸ்படிக நிறம், அறிவின் பரிசுத்தத் தன்மையையும், அறிவு அடைய வேண்டிய கள்ளங் கவடற்ற நிலையையும் குறிக்கும் என்று சொல்லலாம். பளிங்குபோலக் களங்கமற்றிருக்கும் தேவியைக் களங்கமற்ற உள்ளத்தோடுதான் உபாஸிக்க வேண்டும்.

வெண்ணிற மேனியளான கலைமகள் வெள்ளை வஸ்திரம் தரித்திருக்கிறாள்; வெண்ணிறமான நகைகள் அணிந்திருக்கிறாள்; வெள்ளைத் தாமரையில் கொலுவீற்றிருக்கிறாள் - என்று புராணங்கள் கூறுகின்றன.

> வெள்ளைக் கலையுடுத்து
> வெள்ளைப் பணிபூண்டு,
> வெள்ளைக் கமலத்து
> வீற்றிருப் பாள்

என்று காளமேகப் புலவரும் வருணித்திருக்கிறாரல்லவா? தேவிக்கு ஞானமே திருமேனி; தூய்மையே ஆடை; வாய்மையே ஆபரணம் - என்று ஞானிகள் கூறுவதைப் புராண வர்ணனைகளின் உட்பொருளாகக் கருதலாம்.

மேனியெல்லாம் சுத்த ஸ்படிக நிறமாகவுள்ள தேவியின் வாய் மாத்திரம் பவளம்போலச் சிவந்திருக்கிறதாம். "படிக நிறமும் பவளச் செவ்வாயும்" உடைய தேவி தன் பவளவாய் திறந்து உத்தமக் கவிஞருக்கு உபதேசம் செய்கிறாள் என்பது நம்மவர் நம்பிக்கை.

கலைமகளுக்கு விஷ்ணுவைப்போல நாலு கைகள். இந்த நாலு கைகளாலும் இவ்வுலகத்திலே நாலு திசைகளுக்கும் அறிவை வாரிவாரி வழங்குகிறாளாம். ஒரு கையில் ஏடு அல்லது புஸ்தகமும் எழுத்தாணியும் தரித்திருக்கிறாள்; மற்றொன்றில் ஜபமாலை—அதுவும் ஸ்படிக மாலைதான். இந்த நிலை, சிவபெருமானுடைய தக்ஷிணாமூர்த்தி வடிவத்தில் உள்ள ஸ்படிகமாலையையும் புஸ்தகத்தையும் ஞாபகப்படுத்துகிறது. தக்ஷிணாமூர்த்தி ஞானவடிவம் அல்லவா? புஸ்தகம், ஸ்படிகமாலை, ஸ்படிக ஸ்வரூபம், ஞான அனுக்கிரகம், சந்திரகலை, முக்கண் - இவையெல்லாம் ஸர்வ வித்தைகளுக்கும் தலைவரான சிவபெருமானுக்கும் சரஸ்வதி தேவிக்கும் பொது என்பர். சரஸ்வதியைச் சிவபெருமானுடைய சகோதரியென்றுகூடப் புராணங்கள் சொல்லுகின்றன. ஞான

வளர்ச்சிக்கு அறிகுறி பிறைச்சந்திரன் என்பதும், அறிவுத் தெளிவைக் கெடுக்கும் காமனைச் சுட்டெரிப்பது மூன்ருவது கண் என்பதும் இங்கே கவனிக்கத் தக்கன.

ஒரு கையில் ஏடும் எழுத்தாணியும், மற்ருென்றில் ஜபமாலையும் தரித்திருக்கும் தேவி, பாக்கி இரண்டு கைகளிலும் வீணை வைத்து ஆனந்தமாக வாசித்துக் கொண்டிருக்கிருளாம். வீணை இசைக் கருவிகளுக்கெல்லாம் அறிகுறி; இசை அல்லது சங்கீதம் கலைகளுக்கெல்லாம் அறிகுறி. இவ்வாறு எழுந்தருளியிருக்கும் தேவி எப்பொழுதும் படித்துக் கொண்டும் எழுதிக்கொண்டும், பாடிக் கொண்டும், ஜபம் செய்து கொண்டும், வீணைக் குரலில் உபாஸகர்களுக்கு உபதேசம்செய்துகொண்டும்இருக்கிருளாம்.

## உட்பொருள்

வித்யா ஸ்வரூபிணியான சரஸ்வதி தேவியின் வடிவத்திற்கு ஏதாவது உட்பொருள் இருக்க வேண்டுமல்லவா? ஆம். கல்விப் பயிற்சிக்கு முடிவே கிடையாது. அறிவுத் தெய்வமே எப்போதும் படித்துக் கொண்டிருக்கிருள் என்ருல், நாமும் இடைவிடாமல் கல்வி கற்க வேண்டுமென்பது அவசியம் அல்லவா? படிக்கப்படிக்க அறிவு ஊறிக்கொண்டேயிருக்கும். அறிவுத் தெய்வம் படித்துக் கொண்டும் எழுதிக் கொண்டும் இருப்பதுபோல், ஜபம் செய்துகொண்டும் இருப்பதால், நாமும் கல்வியறிவோடு பக்தியுள்ளவர்களாகவும் இருக்கவேண்டும். அப்படி யிருப்பவர்களுக்குத்தான் விரைந்து அருள் செய்யுமாறு துடித்துக்கொண்டிருக்கிறதாம், வெண்ணிற மேனியில் விளங்கும் அந்தப் பவளச் செவ்வாய்.

## வெள்ளைத் தாமரையும் உள்ளத் தாமரையும்

கண்ணும் முகமும் கையும் காலும் தாமரைபோலவே யிருக்கும் அன்னையாகிய லட்சுமியும்சரஸ்வதியும் தாமரைமேல் கொலு வீற்றிருப்பதாகப் புராணங்கள் கற்பனை செய்கின்றன. அழகுத் தெய்வமான லட்சுமியைச் செந்தாமரைமேல் கொலு வைத்தவர்கள், அறிவுத்தெய்வமாகிய கலைமகளை வெள்ளைத் தாமரைமேல் வீற்றிருக்கச் செய்தார்கள். "அறிவும் சுத்தமும் உள்ள இடத்திலே நாம் வீற்றிருப்போம்" என்று கலைமகள் நிச்சயித்திருக்கிருள் என்பதுதான் இதன் உட்பொருளா? இதைக் குறித்துத் தமிழர்களுக்கிடையே வழங்கிவரும் ஒரு பழம்பாடலைப் பார்ப்போம். முதல் முதல் அந்தப் பாடல் பிறந்த சந்தர்ப்பத்தையும் கொஞ்சம் கவனிக்கவேண்டும்.

எப்போதும் படித்துக் கொண்டேயிருந்தார் அந்தப் பழந்தமிழ்ப் புலவர். "ஆஹா, எவ்வளவு படித்தவர்!" என்று பிறர் ஆச்சரியப்படுவார்கள். எனினும் அவர் உள்ளத்தில் மாத்திரம் திருப்தி யென்பதே யில்லை. தாம் படித்த படிப்பெல்லாம் தமக்குள்ளே யிருந்த அறியாமையையே தூக்கிக் காட்டுவதுபோலிருந்தது. புஸ்தகங்களுக்குள்ளாவது புஸ்தக சாலைகளுக்குள்ளாவது சரஸ்வதி சிறைப்படவில்லை என்று கண்டுகொண்டதும், அவர் ஏட்டுப்படிப்போடு அனுபவ ரீதியாகவும் கலைப் பயிற்சி செய்ய ஆரம்பித்தார். ஒரு கலையில் சரஸ்வதி தேவியின் ஏகதேசமான அம்சத்தைத்தான் காண முடியுமென்று தெரிந்துகொண்டதும், பல வேறு கலைகளிலும் பழகிக்கொள்ளவேணுமென்று தீர்மானித்தார். ஆனுல் கலைக் கடலுக்குக் கரை ஏது, எல்லை ஏது? எப்படியாவது தன் வாழ்க்கையைக் கலைமகளுக்கே அர்ப்பணம் செய்யவேணுமென்று சங்கற்பம் செய்துகொண்டார்.

எல்லா உயிர்களுக்கும் தாயாகிய அறிவுத் தெய்வத்தின் அருளைப் பெறுவதென்ருல் லேசான காரியமா? எத்தனை ஏடுகளைப் படித்தாலும் இயற்கை, உயிர்க் குலம், மனித இருதயம் என்ற புஸ்தகங்களையும் படித்தால் அல்லவா, அந்த அருளை அடைந்து இன்புறலாம்? இப்படி எண்ணித் தம்மால் இயன்ற

வரை உலகத்தை அறிந்து பார்த்தும், மனசில் இன்னும் திருப்தி ஏற்படவில்லை.

ஏதோ ஒரு குறை இருப்பதாகவே தோன்றியது; அந்தக் குறை பெருங் குறையாகவும் தோன்றியது. தேவி தம்முடைய உள்ளத்தில் தங்கவில்லையென்றே தோன்றியது. அந்த ஞானத் தாயின் திருவடி ஸ்பரிசத்தால் அல்லவா ஆறுதல் ஏற்படும்; ஆனந்தம் பிறக்கும்?

இப்படிப்பட்ட எண்ணங்களோடு புலவர் ஒரு தடாகக் கரையில் உலாவிக் கொண்டிருக்கிறார். தடாகத்தின் ஒரு புறத்திலே வெள்ளைத்தாமரைகள் அமோகமாய்த் தளிர்த்து மலர்ந்திருக்கின்றன. அவற்றைக் கண்டதும் அவர் உள்ளத்தில் கொஞ்சம் சாந்தி ஏற்படுகிறது. "ஆ, இந்த வெள்ளை மலர்கள் எவ்வளவு மனோகரமா யிருக்கின்றன! கள்ளங்கவடில்லாத மனம்போல்மலர்ச்சி பெற்றிருக்கின்றன. இதனாலன்றோ முன்னோர்கள் அறிவுத் தெய்வத்தை வெள்ளைத்தாமரை மீது கொலுவீற்றிருக்கச் செய்தார்கள்?" என்று யோசித்துக்கொண்டே அந்தப் பூக்களை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டேயிருக்கிறார்.

தேனை நாடிவரும் வண்டுகள் பூக்களைச் சூழ்ந்து ரீங்காரம் செய்கின்றன. அந்தப் பூக்களில் ஒன்றைக் கையில் எடுத்துப் பார்க்கிறார். "இப்படிப்பட்ட மெல்லிய—இனிய—புஷ்பத்தில் அல்லவா சரஸ்வதியின் அடித்தளிர்கள் தங்கியிருக்கின்றனவென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்? இது புராணம் என்றுதான் நினைத்துக்கொண்டிருந்தேன். இப்போது புதை பொருள் விளங்கிவிட்டது!" என்று பூரித்துப் போகிறார்.

சரஸ்வதிதேவியை இனி உள்ளத்திலே பிரதிஷ்டை செய்துகொள்ளக் கூடிய பகிரங்க ரகசியமும் தெரிந்துவிடுகிறது. அந்த ஞான ஒளியும் குதூகலமும் ஒரு பாட்டாகப் பரிணமிக்கின்றன:

> என்னை யுடையாள்
> கலைமடந்தை, எவ்வுயிர்க்கும்
> அன்னை யுடைய
> அடித்தளிர்கள்—இன்துளிசூழ்
> மென்மலர்க்கே தங்கும்
> எனஉரைப்பர்; மெய்யிலா
> வன்மனத்தே தங்குமோ வந்து?

[இன்அளி = இனிமையை நாடிவரும் வண்டுகள்.]

## வன்மனமும் மென்மலரும்

பழைய காலத்துப் புலவர், சரஸ்வதி தேவியின் அருளைப் பூர்ணமாகப் பெறுவதற்குக் கண்டுபிடித்த ராஜமார்க்கத்தைப் பார்த்தீர்களா? இருதயம் அந்த வெள்ளைத் தாமரைபோல் மலர்ச்சி பெறவேண்டுமாம். அந்த மலரைப் போல் அவ்வளவு மென்மையாக இருக்கவேண்டுமாம். பிறர் சூழ்ந்து பயன் அடையும்படி அவ்வளவு இனிமையும் வேண்டுமாம். அந்த இனிமைக்காகவும் மென்மைக்காகவும் தான் சரஸ்வதிதேவி அந்த வெண்ணிற மலரைத் தேடி அடைந்திருக்கிறாளாம். சத்தியமாகிய இனிமையையும், இரக்கமாகிய மென்மையையும் பெற்றுவிட்டால், அப்படிப்பட்ட இருதயத்தைக் கலைமகள்தானே தேடிவந்து அடைகிறாளாம்.

என்ன அழகான—எவ்வளவு உண்மையான—கொள்கை, பாருங்கள்! பாட்டும் எவ்வளவு அழகாயிருக்கிறது! எவ்வளவு படிப்பு இருந்தாலும், எவ்வளவு உலக அறிவோ, வைதிக ஞானமோ இருந்தாலும், உண்மையும் அருளும் நிலைபெறாத உள்ளத்திலே, கலைமகளின் "அடித்தளிர்கள்" தங்கப்போவதில்லை என்கிறார் கவிஞர். இதற்குமேல் காந்தியுகத்தில் வாழும் நாம்தான் புதிதாக என்ன சொல்லக்கூடும்?

* * *

வாழ்வின் பல துறைகளிலும் உண்மையையும் அருளையும் படரவிட்டுக் கலைமகளின் உயர்ந்த தாமரைக் கொடியை நாட்டும் முயற்சியில் பாரதமணி ஈடுபடும் என்பது எனது நம்பிக்கை.

நாடகம்

# பாகபத்திரம்

[ரஸிகன்]

[காரைக்குளம் கிராமத்து நடுத் தெருவில் மேற்கேயிருந்து மூன்றுவது இரட்டைக் காமரா வைத்த காரை வீடு. வாசலில் காற்றுப் பந்தல் போட்டிருக்கிறது. எதிர்த்த வடக்குச்சருகில் மாட்டுத் தொழுவம், 5, 6 கறவை மாடுகளும், சுமார் 10 ஜோடி வரையில் உழவு மாடுகளும் வண்டி மாடுகளும் கட்டலாம். தொழுவத்திற்குப் பின்புறம் எருக்குழியும் சேர் மேடைகளும் ஏற்பாடாயிருக்கின்றன. வாசத்திண்ணையில் மாப்பிள்ளை தலையணையில் மேல்சவுக்கத்தை விரித்துப் போட்டுக்கொண்டு, சுமார் 25 வயதிருக்கும் சிறுபிள்ளை படுத்திருக்கிருன். முகம் சற்றுப் பசியால் வாட்டமாய்க் காட்டுகிறது. கிழக்கேயிருந்து, 50 வயது சுமாருள்ள தையம்மாள்—அந்த ஊர்க் கணக்குப்பிள்ளை பெண்சாதி—கையில் ஓர் ஈயச் செம்பை எடுத்துக்கொண்டு இந்த வீட்டுக் குறட்டில் ஏறும்போது திண்ணையில் படுத்திருக்கும் பையனைப் பார்க்கிருள்.]

தையம்மாள் :—ஏண்டாப்பா, இன்னம் சாப்படல்லேயோ ?

சீதாராமன் :—அன்ன வாசத் தறக்கல்லெ.

தை :—அண்ணு வந்துட்டானே, மானூருக்குப் போயிருக்கானுமே, சுப்புணியெ அழச்சு வர. சுப்புணிக்கு என்ன உடம்பு ?

சீ :—ஏதோ, சொரி செரங்குன்னு சொன்னு. ஆனு, அதுல்லாம் நமக்காரு சொல்ரா.

தை :—அதென்னடா அப்படிச் சொல்ரே, ஆத்துக்கு நீதானே நாட்டாமெ ? அண்ணுவும் மன்னியும் ஒன்னெக் கண்ணெமெக்குள்ளெ வெச்சு மூடிண்டிருக்கான்னு ஊரெல்லாஞ் சொல்லிக்கிரு ! —ஆமாம், ஒங்கண்ணு ஊருக்குப் போய்ப் பத்துநாளாயிட்டாப் பிலிருக்கே. நடவும் நாத்துப் பரியும் இந்த நாள்ளெ பத்து நாள் எட்டு நாள்னு வெளீலே போயிருக்க முடியுமோ ?

சீ :—நாந்தான் ஒத்தன் இருக்கேனேல்லியோ பண்ணேயடிக்கிறத்துக்கு? ஐயர்வாள் சாவகாசமா வருவர். டவுனுக்குப் போனு மூணுவேளெ காப்பி ; ஒரு ராத்திரி தவர்ரதில்லெ ட்ராமா; தேர் திருநாள். இந்தக் குட்டிச்செவராப் போன ஊர்லெ என்னயிருக்கு ? அதான் ஒக்காந்துட்டான். இங்கேயானுப் புள்ளெய்க்கு என்னவோ வந்துட்டுதூன்னு அவ் எப்பொப் பாத்தாலும் கொலு வெச்சபடி யிருக்கா. நமக்குச் சோத்துக்கே தாளமாயிருக்கு. —சரி, அம்மாமி, உள்ளேருந்து வரபோது கொஞ்சம் மோர் தூத்தமாவது கொண்டாங்கோ.

[தையம்மாள் உள்ளே போகிருள். போகும்போதே 'காமாக்ஷி' என்று கூப்பிடுகிருள். கூடத்திற்கடுத்த சமையல் கட்டிலிருந்து 'ஏன் அம்மாமி?' என்ற பெண் குரல் கொஞ்சம் ஹீனத்தொனியாய்க் கேட்கிறது. சமையல் அறை வாசற்படியண்டையில்போய் உள்ளே தையம்மாள் எட்டிப் பார்க்கிருள். அடுப்பில் 2 படி வெங்கலப் பானை ஏற்றிவைத்திருக்கிறது. உலை நீர் இன்னும் கொதிவந்ததாகத் தெரியவில்லை. அடுப்புக் கடுத்தாற்போல் முழங்காலை முகவாய்க்கட்டையில் இடிக்க இழுத்துப்படுத்திருந்த சுமார் 30 வயதுள்ள ஸ்திரீ தையம்மாளைக் கண்டதும் எழுந்து உட்கார்ந்து]

கா :—வாங்கோ அம்மாமி!

தை :—ஏன்னடி அம்மா, படுத்திண்டிருக்கே, ஒடம்பு கிடம்பு சரிப்படல்லியா என்ன ?

கா :—ஒடம்பு ஒண்ணையுங் காணும்.

தை :—அடியெறங்கப்போறது: இப்போதானே அடுப்பு மூட்டியிருக்காப்பிலிருக்கே, ஏன் இத்தனை நாழி இன்னிக்கி? தினம் இத்தனை நாழி சாப்பாடு ஆயிடுமே ஒங்காத்திலே.

கா :—(ஒருரெண்டுங்கெட்டான்சிரிப்புச் சிரித்துக் கொண்டு) சுறுக்கச் சுறுக்கச் சாப்பிட்டு என்னத்தைக் கண்டோம். ஒரு நாளைப்போலே விடிய ஜாமத்துக் கெழுந்திருந்து ஒரு வண்டிப் பாத்திரம்தேச்சு, நாலுமாட்டுக்குத் தீனி வெச்சுக் கறந்து ஒரு மூட்டெ துணி தோச்சு, காப்பி பலகாரமெல்லாம் சட்டமாப்பண்ணி, விழுந்து விழுந்து பறந்துண்டு காரியஞ்செஞ்சா, பதினஞ்சு நாழிக்கிச் சமையலாகும். இன்னிக்கென்னவோ ஒடம்பு அலுப்பா இருந்தது. காலம்பர எழுந்திருக்க சித்தெ நாழியாயிடுத்து.

தை :—ஆமாண்டியம்மா, ஒண்டியாக் கடந்து மாட்டையுங் கன்னையுங்கட்டிண்டு மாரடிக்கிறதுன்னு கஷ்டந்தான்! ஏன்? ஓர்ப்படி ஊருக்குப் போய் மாசம் ரெண்டாச்சு, இன்னும் வரக்காணுமே?

கா :—அவளுக்கென்ன, தாத்தாவும் பாட்டியும் சித்தம்மையும் பெரியம்மையும் சிராட்டறத்துக்கு எத்தனையோ மனுஷாளிருக்கரத்தே, ஊர் லேசிலே விடுமா? என்னுட்டமாவா, அனுதை. ராமையன் கும்பலுக்கு ஒழைக்கரத்துக்குன்னு என்னைப் பெற்று விட்டிருக்கா.

தை :—சே! உனக்கென்ன கொறச்சல், அண்ணு வேணதெல்லாம் தாங்கரச்சே.

கா:—அண்ணு ரொம்ப நல்லவன்; தான், அம்மாமி! எவ்வளவோ ஆசையாகத்தான் இருக்கான். கொழந்தைகளெல்லாம் கொண்டு வெச்சுண்டு ரொம்பப் பாடுபடரான். ஆனு வீட்டிலேயிருக்கர பொம்மனுட்டி அனுஸரணையா இருந்தான்னு தேவலே. கடுவம்பூனையாட்டமா எப்பொ பாத்தாலும் கொழந்தைகள்மேலே எரிஞ்சு விழுந்துண்டு—அதுகள் நடுநடுங்கிண்டுகிடக்கு போராத்துக்கு ஏதாவது ஒண்ணுபோனு ஒண்ணு ஒடம்பு படுத்திண்டிருக்கு! (பெருமூச்செறிகிருள்).

தை:—(ரொம்பக் கரிசனமாய்க் கேட்பவள் போல) ஏண்டி, காமாக்ஷி, ஒங்காத்துக்காரர் ஏதோ கோர்ட்டுக்காரியமான்னு மானூருக்குப் போயிருக்காரென்னு நெனச்சுண்டிருந்தேன். சீதாராமன் சொன்னுன், சுப்புணிக்கின்னு ஏதோ ஒடம்பு சரிப்படல்லியாம். 'அவம்பாட்டுக்குப் போய்ட்டான், ஊர் ஞாபகமே யில்லே, நாங்கடந்து திண்டாடறேன்'னு கொறைப்பட்டுக்கரான் ஒம்மச்சுனன்!

கா:—ஏன், இவரை ஆருபோகவாண்டாம்னு? 'நடவும் நாத்துப்பறியுமாயிருக்கு, நான் போனு பெனக்கட்டுப் போய்டும், நீ போய்க் கொழந்தையை அழச்சுண்டு வண்டியோடே வந்துடலாம்'னதுக்கு, 'நடவுநாத்துப்பறின்னு நான் பாத்துக்கமாட்டேனே? எல்லாம் நீயே போய்ட்டுவா'ன்னு இவர் தானே சொன்னுர். போய்ப் பத்துநாளாச்சு, அம்மாமி! ஒரு காலணு காரடெக்கூடக் காணும். கொழந்தைக்கி ஒடம்பு என்னமோ ஏதோ, அதான் சதா ஜூரமாயிருக்கு (என்று சொல்லும்போதே அவளுக்குக் கண்ணில் ஜலம் வருகிறது).

தை:—அடி அசடே! அழாதே அச்சான்யம் போலே. ஊருக்குப் போனு நாலு நா மின்னெப்பின்னே வர்ரதுதான். புருஷாளுக்கு எத்தனையோ காரியம்!

கா:—அதெல்லாம் ஒரு நாழி அனுவசியமாத்தங்கமாட்டா, இருப்புக்குடுக்காது, இந்தப் புள்ளெய்க்கித்தான் ஒடம்பு என்னமோ தெரியல்லெ! மார்கழி மாசம் லீவுக்கு வந்தபோது ராசாவாட்டமா யிருந்தான். எந்த மகாராஜி முழியாலெ சுட்டாளோ, தெரியல்லெ, ரெண்டுமாசமா ஒடம்பிலே ஊசிகுத்தரத்துக்கு எடமில்லெசொரங்கு. "கொழெந்தே ரொம்பக் கஷ்டப்பட்டான். இப்போதான் கொஞ்சம் தேவலை. டாக்டர் வேறு எடம்

மாத்தல் இருந்தாத் தேவலேனு சொல்றான். பள்ளிக்கூடமுஞ் சாத்தப்போறது. வந்து அழைச்சுண்டு போறது''ன்னு அண்ணு எழுதிஞன். அதும்பேரிலே போனு. ஒரு சேதியுந் தெரியல்லே. (தொட்டி முற்றத்திற்கு அடைப்பாய்ப் போட்டிருக்கும் மூங்கிற் சிம்புத் தட்டிமேல் ஒரு காக்கை வந்து மேற்குப் பார்த்து உட்கார்ந்து கொண்டு கூவுகிறது. காமாக்ஷி கொஞ்சம் சந்தோஷமாய்) காக்கா கத்தரது, ஒரு வேளெ இன்னிக்கி வராளோ, என்னமோ?

தை:—(காமாக்ஷி 'வராளோ?' என்று சொன்னது தன் ஓர்ப்படியைக் குறித்து என்பதாகத் தான் அர்த்தம் பண்ணின வள்போல) – ஆரு, ஒன் ஓர்ப்படியா, எது, எனக்குத் தோணலே. (இதைக் கேட்டதும் ஏதோ சொல்ல வாயெடுத்த காமாக்ஷி பேசாமல் கவனிக்கிருள்.) கீழாத்து வெங்கு ஆம்படயாளிண்டே, ஊருக்குப் போரத்துக்கு மின்னலே காவேரிலே கண்டு, "நான் இம்மே வேறையாப் போனுத்தான் திரும்பிவரப் போரேன். இல்லாபோனு அண்ணுவும் தம்பியும் மன்னியுமா ஏகபோக சாம்ராஜ்யம் பண்ணட்டும்: என்னலே சரிப்படாது சதா இடிபடரத்துக்கு! 'அங்கே நிக்காதே, இங்கே நிக்காதே, அதெப் பண்ணுதே, இதெப் பண்ணுதே'ன்னு எப்பொப் பாத்தாலும் ஓப்படியா லெச்சர் தாங்கல்லெ எனக்கு. மாமியார் நாத்தனர் உவத்திரவம் இல்லாத எடமாப் பாத்துக் குடுக்கணம்னு எங்க பாட்டி குடுத்ததுக்குப் பத்து மாமியார் நாத்தனர் சேத்துக்கலாம் போலேருக்கு எனக்கு ஓர்ப்படி ஆக்கினே'ன்னுளாம்.

கா:—இதென்ன? அம்மாமி! நீங்க சொல்ரது வேடிக்கையா யிருக்கே. பட்டம்மா நல்ல பொண்ணுச்சே, அப்படியெல்லாம் வம்பளக்க மாட்டாளே—என்னவோ, காலத்துங் கூறு யாரு கண்டா? அவ கலியாணம் ஆகி வந்த இந்த எழு வருஷமாச்சு, அவளெ வாயத் தறந்து நான் ஒரு காரியம் சொன்னதில்லியே. அவளா இஷ்டப்பட்டுச் செய்தாத்தான் செய்தது. இல்லாபோனுக் குளிச்சு தலெயெ வாரிப் பின்னி, நெத்திக்கிட்டுண்டு, தலைக்குப் பூவெச்சுண்டு அழகுபோலெ 'ராமாயணக் கீர்த்தனே'யெ வெச்சுண்டு ஊஞ்சப் பலகா தேய ஆடறதும், பாடறதுந்தானே காரியம் அவளுக்கு? நான் ஒரு வார்த்தெ சொல்லரதில்லே. போரது சிறிசு, நம்பளுக்குத்தான் பாட்டில்லே, படிப்பில்லே, அதாவுது சந்தோஷமா யிருக்கட்டும். நாளெக்கி நாலுபுள்ளெயுங் குட்டியுமாயிட்டா அப்பரம் இப்படி ஒக்காந்திருக்க முடியப்போரதா?ன்னு நெனச்சுண்டு, 'ஏண்டி இப்படித் துரும்பே எடுத்துப்போடமாட்டேங்கிரியே!'ன்னு ஒரு ஒரு சமயம் அலுப்பிலே சொன்னலும், 'ஐயோ, எதுக்கு ரெண்டுங்கட்டானே அப்படிச் சொல்லணும்?'னு நானே நெனச்சுக்குவேன். போராத்துக்கு அவமச்சினன்,'ஓஹோ, மாமியார் ஸ்தானத்திலே இருந்து காகிதாப் பண்ணருப்பிலேருக்கு! பேரும் போரும், அமுல் கொஞ்சம் கொறவாகவே நடக்கட்டும்!'னு ஒடனே பரிஞ்சுண்டு வந்துடுவர்.

தை:—ஐயோ, எனக்குத் தெரியாதாடீ காமாக்ஷி! நீயும் ஒங்காத்துக்காரரும் அவா ஆம்படையாம்பொண்டாட்டி பேர்லே உசிராயிருக்கேள்னு? இருந்தாலும் அந்தப் பொரக்கட்டெ அப்படிக் கேட்டுதாம். அதோடே இல்லேடி. அந்த கொடூரக்காரி, ஒங்க நாத்தனர் லக்ஷ்மி யிருக்காளோல்லியோ, அவ வந்திருந்தாளோன்னோ, அப்பொ மாக ஸ்நானத்துக்கு மாயவரம் போய்ட்டுத் திரும்பி ஊருக்குப் போர வழியிலே, அவ பண்ணின வேலேயெக் கேட்டியா? ஒன் ஓர்ப்படியைக் களப்பினதே அவளாம்னு! கீழாத்துப் பாட்டிண்டெ சொன்னுளாம் கோவில்லே கண்டு. "சீதாராமன் அப்பாவி, ஒரெழவுந் தெரியல்லே! அண்ணுவும் மன்னியுமா அவனுக்குப் பட்டெநாமஞ் சாத்தரத்துக்குக் காத்திண்டிருக்கான்னு புத்திலே என்ன சொன்னுலும் படமாட்டேங்காது. 'எங்க அண்ணு', 'எங்க மன்னீ'ன்னு ............

.......... நௌழஞ்சுக்கரது அசட்டுப் புள்ளே. ஆச்சு, அவாளுக்கு வருஷத்துக்கொருபுள்ளெ பொரக்கரது. அடுத்த வருஷம் பொண்ணுக்குக் கலியாணம் ஆகணும். எல்லாம் ஒண்ணு யிருக்கரபோது பண்ணிப்புட்டா செலவு தம்பி தலேலே வெச்சுப்புடலாம்னு எண்ணம். இவனோ சீக்குக்காரன். நாளேக்கெது எப்படியிருக்குமோ? 'வேறே குடித்தனம் போட்டு மறுகாரியம் பாக்கணும்'னு சொல்லுன்னு இந்தப் பொண்ணெக்களப்பி விட்டிருக்கேன்! அதுக்குத்தான் ஊருலேபோய் இருக்கட்டும் நாலு மாசம், தானே வழி பொறக்கும்னு. நான் போறபோது அவளெ அழச்சுண்டுபோய் அவ பொரந்தாத்திலே விட்டுவிட்டுப் போப்பறேன்' ளாம் அந்த மகராஜி.

கா:—சிவசிவ! குலேக்கிக் காயா கனத்துப் போயிடும்? புள்ளெகுட்டி பொறக்கறது நம்ம செயலா? பொறந்துட்டா ஆத்திலே கொளத்திலே கொண்டா தள்ளிவிடப் போறோம். என்? பட்டம்மாளுக்குப் புள்ளெ குட்டி பொறக்காதுன்னு இவாளே முடிவு கட்டிப் புட்டாளாக்கும்! அவளுக்கு என்ன ப்ரமாத வயசாச்சு. எல்லாம் தானே நாளேக்கு வேண்டியது பொறக்கறது. அதிருக்கட்டும். 'இவன் சீக்குக்காரன், நாளேக்கெது எப்படி யிருக்குமோ?' ன்னுளே அக்காக்காரி அனுகூலமா? அப்பொ, தம்பி செத்துப் போய்டுவான், நாம் சொத்தெக் கட்டிண்டுடல்லாம்னு நாங்க எண்ரதாத்தானே ஆச்சு! நீங்களுந்தான், அம்மாமி! நான் இந்த ஊருக்கு வந்த 15 வருஷமாப் பாத்திண்டிருக்கேளே: அந்த மாதிரி வித்தியாசமான எண்ணம் என்னிண்டே என்னிக்காவது நீங்க கண்டதுண்டா? அவம்மா செத்துப்போறபோது எங்க மச்சுனனுக்கு 12 வய்சு. பாட்டெத்தலேயும் செம்பட்டெமயிரும் ஒடம்பெல்லாம் சாம்பப்பூத்து நாயாட்டமா யிருந்தது ஒங்களுக்குத் தெரியாதா? பொழுது விடியறத்துக்கு மின்னாலே, எளம்பசிக்காரர்னு தயிரும் பழையதுமாப் போட்டு, ஏழு மணிக்கெல்லாங் காப்பி வைச்சுக் குடுத்து அவா அண்ணா வர்ரத்தைக்கூடப் பார்க்காமே அவளுக்கு மட்டும் பன்னெண்டு நாழிக்கெல்லாம் வாய்க்குப் புடிச்சதைப் பண்ணிப் போட்டு எவ்வளவோ பயபக்தியாத்தான் நானும் பண்ணிண்டு வந்திருக்கேன். ஆறு மாசம் மொறெ ஜொரம் அடிச்சு, இப்பொ அப்பொன்னு கடந்தாரே கலியாணம்ஆனத்துக்கு மொதல் வருஷம்: நூறு கடுதாசு போட்டுது, ஒடம்பு ரொம்பக் கடுமையாயிருக்கு ஒரு தரம் வந்துட்டுப் போறதுன்னு. இவ்வளவு கரிசனமாப் பேசற அக்காக்காரி எட்டியே பாக்கல்லெ! என்? தம்பி யாம் படையாளுண்டே இவ்வளவு குலாவுக் குலாவரவள், அவம்மா காதிலே போட்டிண்டிருந்த ஓலேயை, தன் சின்ன நாட்டுப் பொண்ணுக்குப் போடணும்னு அவப்பா ஒத்தக் காலிலே நின்னாரே, இவ குடுத்தாளா? அதெ எடுத்து வெச்சுக்குண்டு,'அம்மா அது எனக்குத்தான்னு சொல்லிண்டிருந்தா, அது எனக்குத்தான். வேணுமானா வாங்கிக் கொடுங்கோ. மாட்டுப் பொண்ணுக்கு வைரத்தோடு'ன்னு எக்காளம் போட்டாளே! பட்டம்மாளுக்கு மறந்து போய்ட்டாப்பிலேருக்கு அதெல்லாம். அப்பொ மூஞ்சி பரங்கிக்காயாட்டமா யிருந்துது. அது கடக்கறது, அம்மாமி! ரெண்டுங் கட்டான்கள். (அப்பொழுது தான் தையம்மாள் கையிலிருக்கும் செம்பைக் கவனித்தவள்போல) நான் இன்னும் மோருகடையல்லெ, கடஞ்சதும் குடுத்தனுப்பறேன் வெச்சுட்டுப்போங்கோ, வெங்கலப்பானெ தளேக்கறது. அரிசியைக் களேயறேன்.

(என்று சொல்லிச் சாமான்கள் வைத்திருக்கும் உக்கிராண உள்ளில் நுழைகிறாள். தையம்மாள் செம்பை வைத்து விட்டு வாசல் பக்கம் போகிறாள். வாசலில் வண்டிச் சத்தமும், மாட்டு மணிச் சத்தமும் கேட்கிறது. வாசற்படியை அவள் அடையும் சமயம், வீட்டு வாசலில் இரட்டை மாட்டுவண்டி வந்து நிற்கிறது. மூக்கிணேயில் உட்கார்ந்து ஓட்டி வந்த நீலகண்டையர் கீழே குதித்துப் பின்

புறம்சென்று 10 வயதுள்ள ஒரு பையனை வண்டியிலிருந்து கீழே யிறக்கிவிட்டுச் சாமான்களையெடுக்கிறார். பையன் சிரங்கு கொஞ்சம் ஆறி வடுவிட்டு வருவதால் கொஞ்சம் தேறியிருப்பதாகத் தோன்றினாலும், இன்னும் உடம்பு முழுவதும் குணமாகவில்லை. ஸைதையம்மாள் நீலகண்டையரைப் பார்த்து)

ஸை :—வண்டாப்பா, இப்பொதான் வரையா? ஊர்லெ எல்லாரும் சௌக்கியந்தானே. கொழந்தை ரொம்பத்தான் எளைச்சுப்போயிருக்கான்.

(நீலகண்டையர் பதில் சொல்ல அவசரப்படுகிறவராய்த்தோன்றவில்லை. அதற்குள், மணிச்சத்தம் கேட்டு ஓடிவந்த காமாக்ஷி அப்பொழுதுதான் ஆளோடியில் ஏறி 'சித்தப்பா! என்ன தூங்கரே' என்று சொல்லிக்கொண்டே சீதாராமன் முதுகில் தட்டும் சுப்புணியை வாரியெடுத்துக் கட்டிக்கொண்டு, கண்ணிலிருந்து நீர் கலகலவென்று உதிர ரேழித் திண்ணையில் சாய்ந்துகொண்டு, 'கண்ணே! ஒனக் கொடம்பு என்னடா பண்ணித்து, நாயாட்டமாப்போச்சே, எந்தப் பாவி கண்ணுலே சுட்டாளோ?' என்று பரிதவிக்கும் வார்த்தைகள் திண்ணையில் படுத்திருந்த சீதாராமன் காதில் விழ எழுந்து உட்கார்ந்த அவன் திரும்பிப் பார்த்துக் கொண்டான். இதைப் பார்த்துச் ஸைதையம்மாள், நீலகண்டையர் காதில் படும்படி)

ஸை :—அப்பா! மோரையுங் காணும், தைரையும் காணும். இப்பொதான் அடுப்பிலே எஸ்ஸர் போட்டிருக்கு. ஆத்துக்குவாயேன். காலம்பர ஊத்தப் பங்குக்கினேன். ஒண்ணுதரேன் (என்று பரிவுடன் சொல்ல).

சீ :—வந்துட்டேன் போங்கோ (என்று சொல்லி அந்தண்டைப் பக்கம் திரும்பிப் படுத்துக்கொண்டு விட்டான். நீலகண்டையர் சாமான்களையெல்லாம் உள்ளே கொண்டு வைத்துவிட்டு வாசலில் திரும்பி வந்து, வண்டி கட்டவிழ்க்காமல் நிற்பதைப் பார்த்து, தன் தம்பியை உற்று நோக்கி)

நீ :—வண்டா, இன்னம் சாப்படலியோ?

சீ :— (திரும்பிப் பார்க்காமலே)—சாப்பாட்டுக் கொண்ணும் ஏற்பாட்டைக் காணும்.

(நீலகண்டையர் ஒன்றும் பதில் சொல் சொல்லாமல் ஓய்ந்து நிற்கும் வண்டி மாடுகளின் பூட்டை அவிழ்த்து அவைகளுக்குத் தண்ணீர் காட்டி வைக்கோல் வைத்துவிட்டு வீட்டிற்குள் செல்கிறார். அப்பொழுதுதான் காமாக்ஷி ஒரு லோட்டாவில் காப்பி கொண்டுவந்து தாழ்வாரத்தில் வைக்கிறாள். அதை எடுத்துக் காப்பியைச் சாப்பிடாமல், முகத்தில் கோபக்குறியுடன்)

நீ :—ஏன், இன்னம் போஜனத்துக்கு வேளை வரல்லியோ?

கா :—இதோ, ஒரு நொடிலே ஆயிடும், நீங்க காவேரிக்கிப் போய்வாரத்துக்குள்ளே!

நீ :—எனக்குத்தான் வயறு இருக்கோ? ஓனக்குத் திங்கரத்துக்கு மொரடையில்லேன்னு, பாக்கியெல்லாரும் பட்டினி கடக்கணுமோ?

கா :—பாக்கி யாரு ஆயிரம் பேர் வந்து காத்திண்டிருக்கா சாப்பட ரத்துக்கு? அவருக்குத்தான்—(என்று ஏதோ சொல்ல வாயெடுக்கிறாள்).

நீ :—ஏன், அவனெப்பாத்தா மனுஷனாத் தோணல்லியோ? (என்று ஆத்திரமாய்ச் சொல்லி, காப்பிலோட்டாவை நின்றபடி முற்றத்தில் பொத்தென்று எறிந்துவிட்டு விடுவிடென்று வாசலில் போகிறார். திண்ணையில் தம்பியைக் காணோம். காவேரிக்கு ஸ்நானத்திற்குப் போகிறார்.)

## காட்சி 2

(நீலகண்டையர் ஸ்நானம்பண்ணிவந்து வீட்டுத் திண்ணையில் மாத்தியாநிகம் பண்ணிக்கொண் டிருக்கிறார். சுப்புணி உள்ளே யிருந்து ஓடிவந்து இலைபோட்டிருப்பதாகத் தெரிவிக்கிறான்.)

நீ :—(ஜபம் பண்ணிக் கொண்டே)—ஓங்க சித்தப்பா எங்கேடா? சாப்படாமே எங்கேயோ தொலைஞ்சுபோய்ட்டானே.

சு :—சித்த மின்னே—நீ காப்பியெக் கொட்டினியே அப்பொதான்—கணக்குப்புள்ளெயாத்துக்குள்ளே போனப்பா.

நீ:—(அரைகுறையாய்ப் பிறருக்குக் கேட்கும்படி முணுமுணுத்துக் கொண்டு)—சரி, அந்த வம்புக்காரி வந்துட்டுப் போனளோல்லியோ, ஏதாவது வாயைக் கிண்டுவள். இந்த அசடு ஏதாவது பேத்தி வைக்கும். தடிப்பய, சதா அங்கேதான் கச்சேரி. அந்தக் கணக்குப்புள்ளெ ஒரு காலி, என்னிக்கி அந்தக் குழிலே கொண்டே அழுத்தப்போறுனே, ஆரு கண்டா? (உரக்க) — அப்பொ ஏண்டா நிக்கரே, சாப்படரத்துக்கு நாழியாகல்லே? போய் அழெச்சுண்டு வா.

(சுப்புணி கிழக்கே ஓடுகிருன். அவர் டம்ளரிலிருக்கும் தண்ணீரைக் கீழே கொட்டிவிட்டு எழுந்து உள்ளே போகிருர். சமையல் கட்டுக்கூடத்தில் இரண்டு நுனியிலைகளும், ஒரு ஏடும் போட்டுத் தீர்த்தமும் முதலானது எடுத்துவைத்துப் பரிமாறத் தயாராயிருக்கிறது. நீலகண்டய்யர் வழக்கம்போல் தான் உட்காரும் இடத்தில் போட்டிருக்கும் இலையில் உட்கார்ந்து மனதுக்குள் ஜபித்துக்கொண்டிருக்கிருர். சுப்புணி உள்ளே ஓடிவரும் சத்தம் கேட்கிறது. வரும்போதே)

சு:—அப்பா, சித்தப்பாக்குப் பசிக்கல்லியாம், ஒன்னெ சாப்படச்சொன்னு.

நீ:—பசிக்காமெ என்னுடா வந்துடுத்து? சித்தெமின்னெ வயெத்தெப் புடிச்சுண்டு கடந்தானெ திண்ணேலெ.

சு:—கணக்குப்புள்ளெயாத்து அம்மாமி ரெண்டு ஊத்தப்பம் குடுத்தாளாம். அப்பரம் நான் போரபோது மோருஞ் சாதம் சாப்பிட்டிண்டிருந்தா. அந்த அம்மாமி 'ஏண்டா சுப்புணி! ஒங்கம்மா இப்போதானே ஒலெக்கட்டியிருந்தா, அதுக்குள்ளெ சமையலாயிட்டுதா? ஒங்க சித்தப்பா பசியாச்சுருண்டு கடந்தானேன்னு நான்தான் அழெச்சுண்டு வந்து ரெண்டு ஊத்தப்பங்குடுத்தேன், ஒரு புடி மோரும் 'சாமாச் சாப்பிடுன்னேன்'னு. 'என்ன அம்மாமி! ஒங்காத்திலே கொழம்பு ரஸமெல்லாம் வெக்கல்லியா'ன்னேன். 'இன்னிக்கி அவர் ஊர்லே இல்லே. நான் சமயப் பண்ணல்லே. பழயது ஒரு புடி சாப்பட்டாப்போரதுன்னு இருந்துட்டேன், ஒங்க சித்தப்பாக்கும் அதாம் போட்டேன்'னு.

நீ:—பள்ளிக்கழுதை! நடுப்பகல்லெ பழயது திங்கப் போய்ட்டான்! (தன் அகமுடையாளைப் பார்த்து) காலம்பர காப்பிகூடக் கிடையாதோ?

கா:—ஏன் இல்லாமெ, காப்பி அடை எல்லாம் ஆச்சு. தம்பியிண்டெ ஒங்களுக்குத்தான் கரிசனம். நீங்க ஊர்லே இல்லாபோனுப் பட்டினி போட்டுக் கொன்னுடரேனுக்கும்.

நீ:—சரி சரி, வாயெமூடு. மணி ஒண்ணுகப்போரது, பித்தப் பசிக்காரனுக்கு காலாகாலத்திலே இத்தனெ சூடாப்பண்ணிப் போடரத்துக்கில்லெ, பேசறு!

கா:—(அழும் குரலில்)— என்னெத்தான் ஆக்கினெ பண்ணலாம். ஓச்சலொழிச்சலில்லெ எழவெடுக்க வீட்டு வேலே. எனக்கென்ன ஒடம்பு கல்லாலெ, சாந்தாலெ கட்டி வெச்சிருக்கோ? அலுப்பு, வலி கடையாது போலேருக்கு. என்ன பாடு பட்டாலும் இந்தச் சொல்லுத்தான், என் தலைவிதி.

நீ:—(அரைச் சிரிப்புடன்) - சரி, கொசவன் கிட்டச் சொல்லித் தோடாப் பண்ணிண்டு வந்துடச் சொல்றேன்.

கா:—எனக்குத் தோடாக் கீடா வாண்டாம். எல்லாத் தோடாவையும் ஒங்க தம்பி ஆம்படையாளுக்கும், தங்கைக்குமே பண்ணிப் போடுங்கோ. முக்கியமா, ஒங்க தங்கைக்கித் தான் போடணும், மித்திர பேதத்திலே மெடல் பெத்தவ.

நீ:—(அருவருப்புடன்) - ஆரம்பிச்சுட்டையா ஒன் வியவஹாரத்தெ? இப்பொ அவ பேச்சு எங்கே வந்தது?

கா:—எங்கே வந்துதா? ஏன்? நீங்க பேச்சை எடுக்கத்தொட்டுச் சொல்லும்படியாச்சு. ஒங்க தம்பி யாம்படையாளூருக்குப் போன விஷயம் தெரியுமா ஒங்களுக்கு? தங்கெ வந்து பொறந்தாம் சீராடினுளே. அப்பொ, ஏதோ, ஊரார்

'ரூமு மாமா ஆத்துலே அண்ணன் தம்பிகள் என்ன ஒத்துமையாயிருக்கா!'ன்னு சொல்லிக்கரது ஆகலெப் போலேருக்கு அவளுக்கு! பட்டம்மாளே ஒபதேசம் பூரா ஏத்தி, வேறெ சட்டி வெக்கறத்துக்குன்னு ஏற்பாடு பண்ணிக் கிளப்பிவிட்டுட்டுப் போயிருக்கா.

நீ :—(விஷயமாக) -ஒஹோ, ஜோஸியம் வருமோ ஒங்களுக்கு: இல்லெ இக்ஷிணி உபாஸனே உண்டோ?

கா :—நான் எந்த சோசியத்தைக் கண்டேன். கணக்குப்புள்ளே ஆம்படையாள்தான் சொன்னு, கிழாத்துப் பாட்டிண்டே ஒங்க தங்கையே சொன்னுன்னு.

நீ :—(கோபமாய்) - அந்தப் போக்கிரி முண்டெ நாலு பக்கத்திலேயும் வேலே செய்யறுப்பிலேருக்கே. அடிப்போரிலே தீயை வெக்கரவள்ளு அவ. இங்கே அவளுக் கென்ன வேலே?

கா :—காதிலே விழுந்தத்தெச் சொன்னு. அவபேரிலே எதுக்காகப் பாயரேள். நாம்ப புள்ளெயுங் குட்டியுமா ஒரு பக்கம் பெத்துக் குமிக்கராமாம். நாளேக்குப் பொண்ணுக்குக் கலியாணங்காராக்கி பண்ணினு பொதுவுலே செலவு ஆயிடும்மாம். அதுக்குள்ளே வேறெ குடுத்தனம் போட்டுடணும்னு முடிவு கட்டியிருக்காளாம். அதோடே இல்லே. ஒங்க தம்பி சீக்குக்காரராம். நாளேக்கி எது எப்படியிருக்குமோ, ஒடனே ஒருவிதாயம் பண்ணிப்புட்டணும்னு, ஒங்க தங்கை ஜாதகம் பாத்து வெச்சிண்டிருக்காப்பிலேருக்கு.

நீ :—போரும் போரும், காதறந்த பேச்சும் மூக்கறந்த பேச்சும்! பத்து நாளேக்கி அப்பாடான்னு இந்த எழவு சேதியெல்லாங் காதிலே விழாமேயிருந்தேன். மறுபடியும் ஆரம்பிச்சுடுத்து. (என்று எரிந்து விழுந்துகொண்டு, இலேயில் பரிமாறின ஆகாரத்தை அதில் கவனம் செலுத்தாமலே சாப்பிடுகிருர். பரிமாறிக் கொண்டே)

கா :—எனக்கும் ஊரைவிட்டு எங்கேயாவது கலகலப்பாய் போயிருந்தாத் தேவலேப் போலத்தான் இருக்கு. சாக்கடைக்குப் போக்கடம் எங்கே? (என்று பெருமூச் செறிகிருள்.)

நீ :—ஏன், மாணூர்லெ போய் ஜாகை போடேன், புள்ளெதான் வாசிக்க வேண்டியிருக்கோல்லியோ. ஒங்க அண்ணு ஆம்படையா அடிக்கிற கூத்துலே அடுத்த வருஷம் இந்தப் பயலெ அங்கே கொண்டெவிடாதிலே பிரயோனம் மில்லேன்னு தோணுறது.

சு :— நான் இம்மெ அங்கே போக மாட்டேன் அப்பா! அம்மாமி திட்டும் வசவும் அடியும்! தினம் ஆயிரம் 'தடிக் கழிச்சல்லெ போறவனுக்கு' இழுக்கரு. சதா அவபுள்ளெயெ தூக்கி வெச்சிண்டிருக்கறதுதான் வேலேயாப் போச்சு. மேலே மூத்திரம் பேஞ்சுட்டா, வேறே துணியெக்கூடக் கட்டிக்கப் படாதுங்கரு.

கா :—(மனவருத்தத்துடன்) - அதுவும் நான் பண்ணின பாவம்தான். எங்கண்ணு கொணத்துக்கு இப்படி ஒரு ராக்ஷஸி வாய்க்கணுமோ? (சுப்புணியைப் பார்த்து) வெசவோ அடியோ பட்டுண்டு தாண்டப்பா இருக்கணும்; இல்லாபோனு வாசிப்புப் போய்டுமே.

சு :—வாசிப்புப் போகாமெ இப்போ வாழறதோ? நான் அவாத்துக்குப் போகமாட்டேன் இம்மே. அப்பா சொல்றுப்பலே, நாம்ப தனியா இருப்பமே. நீ வாயேன் எனக்கு சமச்சுப் போடறத்துக்கு. அலமேலுவையும் குஞ்சுவையுங்கூடப் பொண் பள்ளிக்கூடத்திலே சேக்கலாம்.

கா :—ஆமாம், பொண்கட்டைக்கிப் பள்ளிக்கூடம் என்ன வேண்டியிருக்கு! அதுவும் சொல்றத்துக்கில்லே, ஒங்க சித்தி படிச்சிருக்கான்னு எவ்வளவோ ஒசத்தியாக் கொண்டாடுறளோல்லியோ எல்லாரும்.

சு :—சித்தி ரொம்ப படிச்சுப்புட்டாளோ. ஹூம், அவளுக்கு இங்கிலீஷ் ஒரு வார்த்தை தெரியல்லெ. கணக்கு,

ஜாக்ரபி, ஹிஸ்டரி—என்ன படிப்பெல்லாம் படிக்கணம் பள்ளிக்கூடத்திலே! நம்ப அலமேலுவைப் படிக்க வெச்சா, படிப்பு நன்னு வரும் அம்மா!

நீ:—அதுதான் சொல்லறேன் நானும்: பள்ளிக்கூடம் தறந்ததும் ஒரு ஜாகை போட்டுடுவோமா?

கா:—அப்பொ நீங்க என்ன பண்ணறது?

நீ:—நான் எதையாவது பண்ணறேன்; யாவீட்டிலேயாவது சாப்பிடறேன். இல்லே, கையிலே பொங்கித் திங்கறேன். ஒனக்கென்ன, ஒங்காரியத்தை நீ பார்ப்பியா?

கா:—நீங்க சோத்துக்குச் சந்தியிலே நின்னுஅதுபத்திஎனக்குஅக்கரையில்லே போலேருக்கே! ஆமாம், அங்கே சாப்பிடரேன், இங்கே சாப்பட்றேனெம்பானே: தம்பியாம்படையா சாதம்போடுவான்னு சொல்லக் காணுமே.

நீ:—இதெல்லாம் அனுவசியமான கேழ்வெ. ஒன்னெ வடையெண்ணச் சொன்னுளே யோழியத் தொளேயெண்ணச் சொல்லல்லே.

(என்று சொல்லிக்கொண்டே சாப்பாட்டை முடித்து உதராபோசனம் வாங்கி வெளியே போய்க் கையலம்பி வெற்றிலைப் பெட்டியை எடுத்துக்கொண்டு திண்ணைக்குப் போகிருர். அப்பொழுதும் தன் தம்பி திரும்பி வரக் காணேம் என்பதைக் கவனித்து 'உரு எத்ராப்பிலேருக்கே, நடக்கட்டும்' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டு மேல் துணியை விரித்துப்படுக்கிருர்.)

(தீரா) தொடரும்



## தாய் பாஷையில் கல்வி

"நமது உணர்ச்சியை ஒரு பாஷை மூலம்தான் வெளிப்படுத்த முடியும். ஓரே பாஷை மூலம்தான். நாம் சொல்லக்கூடியதை அர்த்த புஷ்டியுடன் வெளிப்படுத்த முடியும். அந்த பாஷையைத்தான் நாம் நம் தாய் மடியில் இருக்கும்பொழுது பேசுகிறோம். 'அம்மா, அப்பா' என்று குழந்தை மழலையுடன் பேசி முகம் மலரச்செய்வது. ஆதலால் அவரவர்களுடைய தாய் பாஷையில் கல்வி புகட்டுவது அவசியம். இல்லாமல் வேறு பாஷையில் புகட்டுவதால் குழந்தைகளுக்குச் சொல்ல முடியாத ஹிம்சையும், கஷ்டமும் ஏற்படுவதல்லாமல் அவர்களுடைய மூளையும் மனதும் சோர்வை அடைந்துவிடுகிறது."

—ஸ்ரீ. எச். என். பிரெய்ல்ஸ் போர்டு

# பஞ்ச நிவர்த்தி சங்கம்

வாழ்க்கையின் அஸ்திவாரமே விவசாயம்தான், எல்லா நாடுகளிலும். இந்தியாவையோ விவசாய பூமி என்று சொல்லவும் வேண்டுமா? சமுதாயத்திற்கெல்லாம் சாப்பாடு போடுகிறவன் விவசாயி. போர்சொல்லுகிறது; விவசாயமோ உயிரைக் காப்பாற்றுகிறது. தங்களுடைய தேவைக்கு அதிகமாகத் தானியங்களை விளைவிக்கக்கூடிய ஜில்லாக்களில் எல்லாம், விவசாயிகள் சேமிக்கக் கூடியவற்றை யெல்லாம் சேமித்து, நமது மாகாணத்திலே உணவிற்குக் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் ஜில்லாக்களுக்கு உதவி செய்ய முற்பட வேண்டும். கூடுமானால் வங்காளம்போன்ற மாகாணங்களுக்கும் உதவி செய்யவேண்டியதுதான்.

இத்தகைய உதவியை உருவாக்குவதற்காகச் சென்னையிலுள்ள சில பிரமுகர்கள் - பலவேறு அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவர்கள் - சென்னை ஹ்யுமனிடேரியன் ஸோர்விஸ் கோர் என்ற பெயரோடு கூடிய ஒரு சங்கமாகச் சேர்ந்திருக்கிறார்கள். நமது மாகாணத்திலும் இந்தியாவின் மற்றப் பகுதிகளிலும் உள்ள ஜனங்களுக்குக் கஷ்ட நிவாரண உதவி அளிப்பதுதான் இவர்களுடைய நோக்கம்.

இந்தச் சங்கத்திலே, பிரபல காங்கிரஸ்வாதிகள், இந்து மகாசபையினர், முஸ்லிம் லீகைச் சேர்ந்தவர்கள், 'ஷெட்யூல்' செய்யப்பட்டிருக்கும் வகுப்பினர், கிறிஸ்தவ இளைஞர் சங்கத்தினர், இந்து ஸேவா சங்கத்தினர், இந்திய இளைஞர் சங்கத்தினர், இந்திய ஸ்திரீகளின் சங்கத்தினர், முஸ்லிம் ஸ்திரீகளின் சங்கத்தினர் முதலானவர்களெல்லாம் ஒத்துழைக்க முன்வந்திருக்கிறார்கள்.

இச்சங்கம், தன் உறுப்பினர்கள் மூலமாகவும் வேறு தொண்டர்கள் மூலமாகவும், பொருளும் உணவுப் பொருள்களும் சேகரித்து வினியோகிக்க வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறது.

இந்தச் சங்கக் கூட்டங்களைக் கூட்டுபவர் சென்னை அட்வகேட்டும், தஞ்சை ஜில்லா மிராசுதாரருமாகிய ஸ்ரீ. டி. எஸ். ராமசுவாமி ஐயர். இந்த நன்முயற்சிக்கு நல்ல ஆதரவு கிடைக்குமென்று நம்புகிறோம்.

## அறிக்கை

காரியாலயமும், அச்சுக்கூடமும், மாயவரத்திலிருந்து மயிலாப்பூருக்கு மாற்றப்பட்டபடியால், இந்த மலர் வெளிவரத் தாமதப்பட்டதைப்பற்றி வருந்துகிறோம்.

மானேஜர்,

**பாரத மணி காரியாலயம்,**

34, அலமேலுமங்காபுரம், மயிலாப்பூர், சென்னை

# மீண்டும் வருவானே?

[வே. ரா. சுந்தரராமன், எம். ஏ.]

## I

அவ்வருஷத்துக் கோடையில் லீவு எடுத்துக்கொண்டு சண்பகமலைச் சாரலுக்குப் போவதாக, சுந்தரம் நிச்சயம் செய்தான். தான் உத்தியோகம் செய்யத் தொடங்கி ஐந்து வருஷங்கள் ஆன பின்பும், எங்கும் ஓய்வுக்காக லீவு எடுத்துக்கொண்டு போவதற்கு அவனுக்குச் சமயம் வாய்க்கவில்லை. அதற்கு முக்கிய காரணம் ஆபீஸில் அவன் செய்துவந்த பொறுப்பான வேலையும், அவன் அதைத் திறமையுடன் செய்ததுமே. அவன் இல்லாவிட்டால் அவ்வேலையைச் செய்ய அந்த ஆபீஸில் வேறு ஒருவருக்கும் இயலாதபடியால், அவன் லீவுக்கு விண்ணப்பஞ் செய்யும்போதெல்லாம் மேலதிகாரிகள் அவனுக்கு ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லி வேறு சந்தர்ப்பத்தில் லீவு கொடுப்பதாக ஒத்திப்போட்டு வந்தனர். அவனுடைய வேலைத் திறனைக் கண்டு மெச்சியவர்களாகையால், நேர்முகமாயும் நிஷ்கண்டமாயும் இல்லையென்று சொல்ல அவர்களுக்கு மனம் வரவில்லை. இத்தொல்லையிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்வதற்காகவே, அவன் சென்ற ஒரு வருஷமாய்த் தன் கீழிருந்த சிப்பந்திகளுள் ஒருவனைத் தேர்ந்தெடுத்து அவனைத் தன் வேலையில் நன்றாய்ப் பழக்கியிருந்தான். ஆகையால் இம்முறை அவனுக்கு எளிதில் லீவு கிடைத்தது. ஆனால் எது என்னவானாலும், லீவு முடிந்தவுடன் கட்டாயம் தன் வேலைக்குத் திரும்ப வேண்டுமென்னும் ஷரத்து அவனுடைய லீவு உத்தரவில் இணைக்கப்பட்டிருந்தது.

கோடை காலத்து வெப்பத்திலிருந்தும் விடுதலையடைய விரும்புவோர் செல்லும் பல ஊர்களில், அப்பிரதேசத்திலே சண்பகமலைச் சாரல் என்பது ஒன்று. உதகமண்டலம், கொடைக்கானல், முதலிய இடங்களைப்போல் அவ்வளவு உயரமில்லை. ஆகையால் அங்கே போவதென்றால் குளிரைத் தடுக்கவல்ல கம்பளித் துணிமணிகளில் அதிகப் பணம் போடவேண்டாம். எனினும் சமுத்திர மட்டத்திற்கு 4,000, 5,000 அடிகள் உயரமிருந்ததால், அங்கே தேகத்திற்கு ஆரோக்கியம் அளிக்கத் தக்க குளிர் உண்டு. சுற்றிலும் நல்ல, அடர்ந்த, செடி கொடிகள், எங்கே பார்த்தாலும் கண்ணிற்குக் குளிர்ச்சி தரக்கூடிய ரமணீயமான காட்சிகள். அதுவும், இவர்கள் போவதாயிருந்த சமயத்தில், சில மரங்களில் பழைய இலைகள் உதிர்ந்து புதிய தளிர்கள் விட்டுப் பசுமை நிறம் இலைப் பச்சையாக முற்றாமல் கிளிப்பச்சையாகவே யிருந்தது. அது இயற்கையழகைப் பன்மடங்கு அதிகரித்தது. இடையிடையே சிவப்பும் நீலமும் மஞ்சளுமாய்ப் புஷ்பங்கள் செறிந்திருந்தன. கவலைகளிலிருந்து தப்பியோடி மனத்திற்குக் கொஞ்சம் சாந்தி பெறுவதற்கு ஏற்ற இடங்களில் இது ஒன்று. மலைகளில் தத்தித் தத்தி ஓடி விழுந்துகொண்டிருந்த அருவிகள் பல. அச் சின்னஞ் சிறு நீர்வீழ்ச்சிகளிலிருந்து மேலிருந்து கீழ்நோக்கி ஒலிக்கும் 'ஜோ' என்னும் சத்தமும், வீழ்ச்சிக்குப் பின் அமைதியுடன் ஓடும் தண்ணீரின் 'சல சல' வென்னும் ஓசையும், இடையிடையே பக்ஷிஜாலங்களின் மதுர கானமும் தவிர அங்கு மௌனமே குடிகொண்டிருந்தது. மலையின் சரிவுகளில் சிலர் பங்களாக்களைக் கட்டியிருந்தனர். கோடையில்தான் ஜனங்கள் நிரம்பியனவாக இருக்கும். ஏனைய மாதங்களில் அவைகளில் பெரும்பாலன

காலியாய்ப் பூட்டிக் கிடக்கும். இவ்விடுதி களில் ஒன்றை வாடகைக்கு ஏற்பாடு செய்துகொண்டு சுந்தரம் தன் லீவு முழுவதையுமே அங்கே கழிக்க நிச்சயித்தான்.

## 2

லீவு கிடைத்து ஊருக்குப் புறப்படுகையில் சுந்தரத்திற்கு இருந்த குதூகலம் இவ்வளவு அவ்வளவு என்று சொல்லமுடியாது. சதா புள்ளி விவரங்களையே ஸ்மரிக்கவேண்டியிருந்த, கவர்ச்சியற்ற, தன் வேலையைச் சிறிது காலம் மறந்து மனநிம்மதியுடன் இருக்கத் தனக்கு ஒருசந்தர்ப்பம்கிட்டியதைக் குறித்துத்தான் அவனுடைய மனமகிழ்ச்சியெல்லாம். அவனைவிட அவனுடைய வாழ்க்கைத் துணைவி ராஜிக்கு இதில் பதின்மடங்கு அதிக சந்தோஷம்.

சுந்தரம் தன்னுடைய இருபதாம் வயதில் பி. ஏ. ஆனர்ஸ் வகுப்பில் கடைசி வருஷத்தில் படிக்கும்போதே, அவனுக்கு ராஜியை மணஞ்செய்துவிட்டனர். அப்படிப்பு முடிந்து பரீக்ஷை எழுதியதும் ராஜி அவனுடைய "வீட்டிற்கு வந்தாள்." வந்த பத்தாம் மாதத்தில் "சமத்தாய்" சுவர்ணவிக்கிரகம் போன்ற ஓர் ஆண் பிள்ளையைப் பெற்று அவனுக்குப் பரிசாகக் கொடுத்தாள். பிள்ளைக்குத் தங்கள் இருவர் பேரையுஞ் சேர்த்துக் கொடுக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் சுந்தர ராஜன் என்று நாமகரணஞ் செய்து 'பட்டு' என்னும் செல்லப்பெயரால் அழைத்தனர். பிள்ளை பிறந்த அதிர்ஷ்ட வசமாய் சென்னையில் எம். எஸ். எம். ரயில்வேயில் ஆடிட் ஆபீஸில் சுந்தரத்திற்கு ஒரு நல்ல உயர்தர உத்தியோகம் கிடைத்தது. வேலையை ஏற்றுக்கொண்ட சில மாதங்களுக்கெல்லாம் ராஜியைக்கூட்டிக் கொண்டு வந்து தனிக் குடித்தனம் வைத்த சுந்தரம், ஐந்து வருஷங்களாக வேறு எங்கேயும் போகமுடியாமல் தவித்துக்கொண்டிருந்தான். எனவே, வீட்டு வேலையைச் செய்தும், குழந்தையை வளர்ப்பதில் ஈடுபட்டும், தேக சிரமம் அடைந்திருந்த ராஜிக்கு இப்பொழுது கொஞ்சம் ஓய்வு கிடைக்கப் போகிறதென்றால்,என் மனம்மகிழாது? லீவு கிடைத்து எல்லா ஏற்பாடுகளும் செய்தவுடன் சுந்தரம், ராஜி, பட்டு இம் மூவரும் எழும்பூர் ஸ்டேஷனில் 'இந்தோ ஸிலோன் எக்ஸ்பிரஸ்' வண்டியில் இரண்டாம் வகுப்பில் உட்கார்ந்திருக்கையில், அவர்கள் மனத்திலுள்ள கட்டுக்கடங்காத சந்தோஷம் அவர்கள் முகங்களில் பிரதிபலித்தது.

## 3

சண்பகச் சாரலில் சுந்தரம், ராஜி, பட்டு இவர்கள் வாழ்க்கை இந்திர போகமாய் விளங்கிற்று. தினந்தோறும் காலையில் காப்பியையும் ஏதாவது சிற்றுண்டிகளையும் அருந்திவிட்டு, அங்குள்ள ரஸ்தாக்களில் உலாவப் போவார்கள். 8 மணியிலிருந்து 10 மணி வரையில் பொழுது இவ்வாறு கழியும். பிற்பாடு வீடு வருவதும், ஸ்நானபானாதிகளுக்குப் பின் போஜனமும். நடுப்பகலில் கொஞ்சம் இளைப்பாறுதலும் துயிலுதலும். மாலையில் ஏதாவது டிபன் செய்துகொண்டு திரும்பவும் உலாவச் செல்லல். இரவில் எட்டு மணிக்குப் போஜனம். அதற்குப் பின் கொஞ்ச நேரம் அளவளாவிய பின் தூங்கப் போதல். இதுதான் அங்கு அவர்கள் வாழ்க்கையின் தினசரிச் சம்பவங்கள். அச்சாரலில் தோன்றிய பல அருவிகளுக்குப் போவார்கள். சில இடங்களிலிருந்து மலைகளின் மடிமேல் படுத்துறங்குவதுபோல் காணப்படும் வெள்ளி நிறங்கொண்ட மேகங்களின் எழிலைப் பருகுவார்கள். அருவிகளின் பக்கமாய்ச் சென்று சில சமயங்களில் சிற்றுண்டி அருந்துவார்கள்.

இவ்வாறே சுந்தரத்தின் லீவு முழுவதும் உல்லாசமாய்க் கழிந்துவிட்டது. அன்றுதான் அவர்கள் அங்கு இருக்கக்கூடிய கடைசிநாள். பொழுது விடிந்தால் ஊருக்குப் புறப்படவேண்

டும். அன்று மாலையிலும் வழக்கம் போல் மூன்றரை, நான்கு மணிக்கு உலாவுவதற்காக வெளியே கிளம்பினர்கள். சாதாரணமாய் இம்மாதிரி உலாவுகையில் ஒருவர் மாற்றி ஒருவராய்ப் பட்டுவைச் சுந்தரமும் ராஜியும் சுமந்துகொள்ளுவது வழக்கம். நடுநடுவே குழந்தை தொந்தரவு செய்ததின் பேரில் தானாகவே நடப்பதற்காகக் கீழே விடுவதும் உண்டு. அன்று புறப்பட்டுக் கொஞ்சதூரம் சென்றவுடனேயே, பட்டு கீழே இறங்கித் தானாக நடக்கவேண்டுமென்று பிடிவாதம் செய்தான். அவர்களும் அவனைக் கீழே விட்டார்கள்.

தங்கள் பேச்சின் சுவாரஸ்யத்தில் பின்னால் தத்தித் தத்தி நடந்து வந்துகொண்டிருந்த குழந்தையைக் கவனிக்காமல் சற்று அசிரத்தையாயிருந்துவிட்டனர். மலைச்சாரல் ரஸ்தாவில் ஒரு முடுக்கு குறுக்கிட்டது. அதற்கு அருகில் அதிலிருந்து பிரிந்த வேறு ஒரு கிளை ரஸ்தா கொஞ்ச தூரம் சென்றவுடன் ஒரு கொடிவழியாகக் குறுகி மறைந்தது. இவர்கள் பாட்டிற்கு ரஸ்தாவில் சென்றுகொண்டிருக்கையில் பட்டு எதிரில் முடுக்கில் திரும்பியவுடன் சுந்தரத்தையும் ராஜியையும் காணாதவனாய்க் கிளை ரஸ்தாவில் சென்றான். சிறிது தூரம் சென்றவுடன் ரஸ்தாவும் மறைந்து தன் பெற்றோர்களையுங் காணாதவனாய்த் திகிலடைந்து வீரென்று அழ ஆரம்பித்தான்.

அப்பொழுது அங்கு அருகிலிருந்த ஒரு குறப்பெண் அவன் அழுகையைக் கேட்டு அவனிடம் ஓடி வந்து அவனை எடுத்து அணைத்துக் கொண்டு அவனுடன் பேச்சுக்கொடுத்ததும் அவனுக்கிருந்த பயம் முன்னிலும் அதிகரித்து அழுகையும் பலத்தது. குறப்பெண் அவனைச் சமாதானம் செய்ய முடியாதவளாய்த் தன் நடையைத் துரிதப்படுத்தி அருகில் வேறு ஊருக்குப் போக ஏற்பாடு செய்துகொண்டிருந்த தன் கூட்டத்தினுள் கலந்துகொண்டாள். பட்டுவின் மழலைச் சொற்களைப் புரிந்துகொள்ளுபவர்கள் அக்கூட்டத்தில் எவரும் இல்லாததால் அவனைத் தங்களுள் ஒருவனாக ஏற்றுக் கொள்வதென்று நிச்சயஞ் செய்து அவனையும் தங்கள் தட்டுமுட்டுச் சாமான்களில் ஒன்றாக எடுத்துக் கொண்டு, கூட்டம் அவ்விடத்திலிருந்து வேறு ஊருக்குப் பிரயாணமாயிற்று. பாதி பீதியினாலும் பாதி நடந்த களைப்பினாலும் அழுகையினாலும் உண்டான சோர்வினால் பட்டு தூங்கிவிட்டான்.

4

பேச்சுப் பராக்கிலேயே வெகுதூரம் போய்விட்ட சுந்தரம்தம்பதிகள் கொஞ்ச நாழிகைக்கு அப்புறம் திரும்பிப் பார்த்ததும், குழந்தையைக் காணாமல் திடுக்கிட்டனர். 'பட்டு', 'பட்டு' என்று கத்திக் கூப்பிட்டனர். தங்கள் குரலின் பிரதியொலிதான் சில சமயங்களில் கேட்டதேயொழிய வேறு ஒரு வித பதிலும் வரவில்லை. அவர்களுக்கு இன்னது செய்வதென்று புலப்படவில்லை. ரஸ்தாவில் அங்குமிங்கும் பார்த்து தேடினர். வழியைவிட்டு எங்கேயாவது குழந்தை சென்றிருக்குமோ என்று சந்தேகித்து அப்படியும் கொஞ்சம் தேடினார்கள்; முடுக்கில் பிரிந்த கொடி வழியில் சென்றும் தேடினார்கள். ஆனால் இங்கு இவர்கள் வருவதற்குள் குறக் கூட்டத்தின் பிரயாணம் தொடங்கி விட்டபடியால், அங்கும் குழந்தையைக் காணவில்லை. இருவருக்கும் மனம் பதை பதைத்தது. என்ன செய்வதென்று தெரியவில்லை. ஐந்து வருஷங்களாய்ப் பாலூட்டிச் சீராட்டிப் பாராட்டி வளர்த்துவந்த தங்கள் செல்வக் குமாரனை உயிருடன் பறிகொடுத்துவிட்டதால், இருவரும் பைத்தியம் பிடித்தவர்கள்போல் ஆயினர். குழந்தையை மலைச்சாரலில் சென்ற இடம் தெரியாமல் விட்டுவிட்டு வீடு திரும்பவே அவர்களுக்கு மனம் வரவில்லை.

அவர்கள் மனத்தில் தோன்றிய பல விபரீத எண்ணங்களில் தங்கள் உயிரைத் தற்கொலை செய்துகொண்டு மாய்த்துவிடுவது என்பதும் ஒன்று.

ஆனால் அதற்குத் தைரியம் வரவில்லை. வாய்விட்டுக் கதறினர். தங்கள் அசிரத்தைக்குத் தங்களையே நொந்துகொண்டனர். கடைசியில் வேறொன்றும் செய்யத் தோன்றாதவர்களாய் வீடு திரும்பினர். மறுநாளோ ஊருக்குப் பிரயாணமாக வேண்டும். அங்கேயே இன்னும் சில நாட்கள் இருந்து தேடலாமென்றாலோ, லீவு முடிந்ததும் கட்டாயம் வேலைக்குத் திரும்பவேண்டும் என்னும் உத்தரவு குறுக்கேநின்றது. என்ன செய்வார்கள், பாவம்! அன்றிரவு அவர்கள் சாப்பிடவேயில்லை.

"ஐயோ! இக்கண்ணராவிக்குத் தானா நான் பிள்ளையைப் பெற்றேன்?" என்று ஒரு முறை ஓலமிடுவாள் ராஜி.

"கடவுளுக்கு என்ன கண்ணில்லையா? ஒரு பாவமும் அறியாத, ஒருவர் ஜோலிக்கும் போகாத, நமக்கா இந்தத் தண்டனையை விதிக்க வேண்டும்?" என்று கடவுளையே நிந்திப்பான் சுந்தரம்.

"அன்று ஸினிமாவில் ஹரிச்சந்திரன் - படம் பார்த்துக்கொண்டிருக்கும் போது பாம்பு கடித்திறந்த தன் குமாரன் லோகிதாசனைத் தன் மடியிலிருத்திச் சந்திரமதி புலம்புகையில், நம் இருவர் மடியிலும்படுத்திருந்த குழந்தையை நோக்கி, 'நம் பட்டுவுக்கும் இக்கதி நேர்ந்தால் என்ன செய்வது?' என்று அச்சானியம்போல் கேட்டேனே! அது உண்மையாகிவிட்டதே" என்று பழங் கதையைக் கிளறித் தன் கணவனைக் கடிந்து பேசுவாள் ஒரு சமயம் ராஜி. இவ்வாறு அன்னமுமின்றி, நித்திரையுமில்லாமல், அவ்விரவு கழிந்தது.

மறுநாட் காலையில் அவ்வூரை விட்டுப் புறப்படுகையில், "ஐயோ! இப்பாழும் ஊருக்கு எந்த வேளையில் புறப்பட்டோமோ? எங்கள் கண்மணியை உயிருடன் இம்மலைகளுக்குப் பலி கொடுக்க நேர்ந்ததே!" என்று கூறிக் கதறிய வண்ணம் ராஜி கண்ணீரும் கம்பலையுமானாள். அங்கிருந்த ஒரு சிறு போலீஸ் ஸ்டேஷனில் "கேஸை" எழுதி வைத்ததுதான் மிச்சம்: பலன் ஒன்றும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

## 5

பட்டு காணமற் போனபின் ஐந்து வருஷங்கள் கழிந்தன. சுந்தரத்தின் மனத்திலும், ராஜியின் மனத்திலும் உண்டான வடு மட்டில் சதா அவர்களை உறுத்திக்கொண்டேயிருந்தது. உற்றார் உறவினரின் பிரிவால் ஏற்படும் துக்கம் நாளடைவில் குறைந்து மறையும் என்பார்கள். ஆனால் இக்கூற்று இவர்கள் விஷயத்தில் பொய்யாயிற்று. நாளாக ஆக, அவர்கள் துயரம் அதிகரித்ததே ஒழிய குறையவில்லை. சுந்தரம் ஒரே மருள் பிடித்தவன்போலானான். ராஜி தனக்குத் தானாகவே பேசிக்கொண்டு பைத்தியம் பிடித்தவள்போலாகிவிட்டாள்.

இவர்கள் தோற்றத்தைக் கண்டு இரங்கிய நண்பர் ஒருவர் தூண்டுதலின்பேரில், சுந்தரமும் ராஜியும் ராமேச்வரத்திற்குப் போய் வருவதாகப் புறப்பட்டனர். ராமநாதஸ்வாமியின் தரிசனத்தினாலாவது மனநிம்மதி ஏற்படுமோ என்னும் நம்பிக்கைதான் அதற்குக் காரணம். வழியில் மதுரை மீனாக்ஷியம்மனைத் தரிசிப்பதற்காக மங்கம்மாள் சத்திரத்தில் தங்கினார்கள். சத்திரத்து வாசலில் சுந்தரம் நின்றுகொண்டிருக்கையில் அருகில் விளையாடிக்கொண்டிருந்த சிறுவர்கள் கூட்டமொன்றில் ஒரு பையனின் தோற்றம் இவனுடைய மனத்தைக் கவர்ந்தது. அப்பையனைக் கூர்ந்து கவனிக்கையில் அவன் அசல் தன் மனைவி ராஜியின் அச்சு வார்ப்படம்போல் இருந்ததைக் கண்டு வியந்தான். அதே நீண்ட முகம், அதே எடுப்பான மூக்கு, அதே பரந்த, உயர்ந்த, விசாலமான நெற்றி. சிரிக்கையில் அவளுக்கு விழுவதுபோலவே இவனுக்கும் கன்னத்தில் குழிகள். என்ன ஆச்சரியம்! மறுகணத்தில் ஐந்து வருஷங்களுக்கு முன்பு தாங்கள் இழந்த பட்டுவின் தோற்றம் தன் மனக்

கண்முன் வந்து நின்றது. இந்தப் பைய னுக்கும் 10, 11 வயதுதானிருக்கும். ஒருகால்—?

இவ் வெண்ணம் தோன்றியவுடன் சரேலென்று உள்ளே சென்று ராஜியை அழைத்துவந்து பையனைக் காண்பித்து அவன் அவளுடைய சாயலாயிருப்பதையும் எடுத்துரைத்த வுடன், அவளும் பிரமித்தாள். பையனை அருகில் அழைத்துப் பார்த்ததில், தங் கள் குழந்தை பட்டுவிற்கு இருந்ததைப் போலவே பிடரியில் இவனுக்கும் காலணா அளவு மச்சம் இருந்ததைக் கண்டனர். அவர்களுக்கு உதித்த சந்தே கம் ஊர்ஜிதமாயிற்று. ஆனல் அவன் எப்படித் தங்கள் 'பட்டு'வாயிருக்க முடி யும்?

'அம்பி! உன் பேரென்னடா?' என்று சுந்தரம் கேட்கவும் பையன்,

'சுந்தரேசன்! என் மாமா?' என்று பதில் கேள்வி கேட்டான் பையன், 'களுக்' என்ற ஒரு சிரிப்புடன்.

'எங்கே, எங்களை ஒங்காத்துக்கு அழைச்சிண்டு போ. ஒங்கப்பாவைப் பாக்கணும்' என்று சுந்தரம் சொன்ன தும்,

'வாங்கோ மாமா!' என்று சொல்லிய வண்ணம் வழி காட்டிக்கொண்டு போனன்.

பையன் காட்டிய வீட்டிற்குப்போன தும், அங்கிருந்த ஒரு பெரியவரை நோக்கிச் சுந்தரம்,

'இவன் தங்கள் புத்திரனா?' என்று கேட்டதும் அவர்,

'அப்படித்தான் சொல்லி வருகி றோம். எல்லாம் மீனாக்ஷி தேவி கொடுத்த பிரசாதம். குழந்தையில்லாத குறையைத் தீர்ப்பதற்காக ஐந்து வரு ஷங்களுக்கு முன் இவ்வூர்க் கோயிலில் அம்பாளை ஸேவை செய்துகொண்டிருக் கையில், தேவி எங்களுக்கு இவனை ஒரு குறத்தியின்மூலம் அளித்தாள்' என் ருர். உடனே கண்களிலிருந்து மல மலவென்று நீர் பெருக, ராஜி,

'வாடா, என் கண்ணே', என்று சொல்லி அப்பையனை வாரியணைத்து முத்தமிட்டுக் கொஞ்சலானாள்.

'இவனுக்கு ஐந்து வயதாகும்போது சண்பகச் சாரலில் இவனைப் பறிகொடு த்த அபாக்கியசாலிகள், ஐயா, நாங்கள்! இவன் ஜாடையையும், இவன் தாயா ராகிய இவள் ஜாடையையும் பாருங்கள்' என்று தழுதழுத்த குரலில் சுந்தரம் விஷயத்தை ஒருவாறு அவருக்கு விளக் கினன்.

'சரி, பிள்ளையை எடுத்து வளர்த்து அப்பா அம்மாவிடம் கொடுக்கவேண் டும் என்பதுதான் தேவியின் ஆக்ஞை போலிருக்கிறது. உங்கள் குழந்தையை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று அப்பெரியவர் துக்கம் நெஞ்சையடைக் கச் சொல்லமுடியாமல் சொல்லி முடித் தார்.

* * *

பக்கத்தில் படுத்திருந்த ராஜியின் கை தன்மேல் படவே சுந்தரத் தின் தூக்கம் கலைந்தது. சில மாதங் களுக்கு முன் திடீரென்று பன்னிரண்டு வயசுள்ள தன் ஒரே புதல்வன் இறந் ததை நினைத்து மனமுடைந்து வெகு நேரம் தூக்கமில்லாமல், பின்பு தன்னை யும் அறியாமல் தூங்கியபோது உண் டான கனவே இதெல்லாம்!—என்று உணர்ந்தான்.

'சொப்பனத்தில், மறைந்த குழந்தை திரும்பிக் கிடைத்தது. நாங்கள் உண் மையிலேயே நமனுக்குப் பறிகொடுத்த பாலகன் மீண்டும் வருவானே?' என்று எண்ணிச் சுந்தரம் அங்கலாய்த்தான். அதே சமயத்தில், 'ஐயோ! கண்ணா, அநியாயமாய் எங்களை விட்டுவிட்டுப் போய்விட்டாயே!' என்று வாய் பிதற் றியவளாய்த் தூக்கத்தில் ராஜி புரண்டு கொடுத்தது, விடி விளக்கின் மங்கலான ஒளியில் தெரிந்தது. அவன் கண்களி லிருந்து சில நீர்த்துளிகள் உதிர்ந்தன.

# மழைக் கூத்து

[ "ராஜன்" ]

மொண்டுவந்த நீரைக் கண்டபடி கொட்டுதே ; - கடல்
சண்டையிட மண்டிமலைத் தண்டெடுக்குதே ;
கொண்டலெல்லாம் குண்டுவீசிச் சண்டை போடுதே ; - வெறி
கொண்டெழுந்து வாளெடுத்து மின்னி வீசுதே !

அண்டமெல்லாம் மண்டுபுகைக் குண்ட மாகுதே ; - இருள்
அண்டிவந்து வாய்திறந்து கொண்டிருக்குதே ;
கண்டதெல்லாம் உண்டுவிடக் கையை நீட்டுதே ; - சுழல்
காற்றடித்து மூச்சுவிட்டுத் தலைசுற்றி யாடுதே!

கண்டுவெறி கொண்டதிரும் அண்ட முருளுதே ; - பகை
கண்டதிர முன்னணியில் முரசடிக்குதே ;
மண்டிவந்த வெள்ளமெங்கும் மயங்கி ஓடுதே ; - பல
குண்டுகுளம் ஏரியாறு கண்டுகரை தாவுதே!

காடுமலை தேடிவெள்ளம் கட்டறுத்துப் பாயுதே ; - பயிர்
வாடிவிழும் வயலறுத்து வண்டலிட்டு ஓடுதே ;
நாடுபல நாடிமழை ஆடிப் பொழியுதே ; - பல
ஆடுமாடு வீடுகளும் கோடைமழை ஆடுதே!

மேடுபள்ளம் ஓடையெல்லாம் மூழ்கிப் போகுதே ; - சிறு
வீடுபல வெள்ளமதில் மிதந்துதெப்ப மாகுதே ;
ஓடும்வெள்ளம் குப்பைகூளம் அள்ளிப் போகுதே ; - சிறுவர்
ஓடிவந்து விட்டகப்பல் ஆடிப் போகுதே !

கிடுகிடுக்கக் குளிர்நடுக்கச் சூழ்ந்துமழை பெய்யுதே; - வரும்
குடையொடிக்கக் காற்றெழுந்து கூத்தடிக்குதே ;
படபடக்கப் பரிதவிக்கப் பாய்ந்து மோட்டார் ஓடுதே ; - சேறு
பட்டுடையும் கெட்டிடாமல் எட்டியோட வைக்குதே.

---

# நம்பிக்கையின் அற்புதம்

## (நம்மாழ்வார் உபதேசம்)

[கலை விநோதன்]

கூனன், குருடன், முடவன், ஊமை ஆகிய நால்வரும் ஸ்தல யாத்திரை செய்து கொண்டிருந்தார்களாம். வழியிலே எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டே போய்க் கடைசியில் திருப்பதி மலையை அடைந்தார்களாம்.

### மலைமேல் அற்புதம்

மலை ஏறுவது அவர்களுக்கு மறு ஜன்மம் எடுப்பதுபோல் இருந்திருக்க வேண்டுமல்லவா? உண்மையாகவே, மறுஜன்மம் கிடைத்துவிட்டதாம் மலை ஏறியதும்! அந்தக் காட்சியை மனக் கண்ணால் கண்ட ஒரு கவிராயர் பாடுகிறார்:—

கூன்கொண்டு போனவன் தான்நிமிர்ந்
 தோடக், குருடன் கொம்பில்
தேனென்று காட்ட, முடவன்அத்
 தேனை எடுக்க, அயல்
தான்நின்ற ஊமை எனக்கென்று
 கேட்கத், தருவன் வரம்
வான்நின்ற சோலை வடமலை
 மேல்நின்ற மாய வனே!

என்ன ஆச்சரியம்! கூனன் நிமிர்ந்து ஓடத் தொடங்கினானாம். அவ்வளவு உத்ஸாகத்திற்குக் காரணம், தான் கொண்டுபோன கூனல் காணாமல் போனது மட்டுமன்று; "அதோ, தேன்" என்று ஒருவன் சுட்டிக் காட்டியதுதான். அப்படிக் காட்டியவன் யார், தெரியுமா? தோழனான குருடன்தான்!

நிமிர்ந்தோடிய கூனன், குருடன் நின்று கொண்டிருந்த இடத்திற்குப் போவதற்குள், இவன் சுட்டிக்காட்டிய மரக்கிளையில் தொத்திவிட்டான் வேறொருவன். அவன் யார்? முடவன் தான்! கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டு ஏறித் தேனெடுக்கிறானாம். "இது என்ன?" என்று ஆச்சரியப்படும் போதே, "தேன் எனக்கும் வேணும்" என்று அழுத்தம் திருத்தமாய்க் கேட்கிறான், பக்கத்தில் நின்றுகொண்டிருக்கும் ஊமை!

"இப்படியெல்லாம் வரம் தருகிறார் திருப்பதிமலையில் கோயில்கொண்டிருக்கும் கடவுள்!"—என்று அவருடைய ஆச்சரிய சக்திகளைச் சாதுரியமாய்ச் சிறப்பிக்கும் ஒரு கற்பனை இது.

### ஆழ்வாரும் திருப்பதி மலையும்

இந்தக் கவிஞருக்கு முன்னமே இப்படிப்பட்ட நம்பிக்கையின் அற்புத சக்தியை நம்மாழ்வாரும் வேங்கடமலையைக் குறித்து வெளியிட்டிருக்கிறார்.

குன்றம் ஏந்திக் குளிர்மழை காத்தவன்,
அன்று ஞாலம் அளந்த பிரான்பரன்,
சென்று சேர்திரு வேங்கட மாமலை
ஒன்று மேதொழ, நம்வினை ஓயுமே!

என்ற பாசுரத்திலே, ஆழ்வாருடைய—அபார நம்பிக்கை நிறைந்த—பக்தியுள்ளத்தை ஒருவாறு காணலாம்.

கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்ததும், திசைகளையெல்லாம் திருவடியால் அளந்ததும், ஈச்வரனுடைய பேராற்றலைக் காட்டுவதுபோல், பேரருளையும் காட்டுகின்றன. "அந்த ஈச்வரனே கோயில் கொண்டிருக்கிறான் வேங்கட மலையில்" என்று நம்பித் தொழுவது, ஸர்வ சக்தியின் அந்த அருளைப் பெறு

வதற்குச் சுலபமான வழியென்கிறார் நம்மாழ்வார்.

பகவான் பாவங்களைப் போக்குவதோடு, பிறப்பையும் இறப்பையும் போக்கி இந்த ஜன்மத்திலே பிணிகளையும் மூப்பு அல்லது கிழத்தனத்தையும் கூடப் போக்கி விடுகிறாராம்:

ஓயும் மூப்புப் பிறப்(பு) இறப் புப்பிணி
வீயு மாறுசெய் வான்திரு வேங்கடத்(து)
ஆயன், நாள்மல ராம்அடித் தாமரை
வாயுள் ளும்மனத் துள்ளும் வைப்பார்கட் [கே!

என்கிறார் நம்மாழ்வார்.

## நம்பிக்கையும் ஞானபக்தியும்

கடவுளை ஸ்தோத்திரம்செய்வதாலும், தியானம் செய்வதாலும் சகல வித நன்மைகளையும் அடையலாமென்பது ஆழ்வார் கருத்து. முக்கியமாக வேண்டியது பக்தி விசுவாசம்தான்—குருட்டு நம்பிக்கையன்று; உண்மையான பக்தியோடு கூடிய நம்பிக்கை. இத்தகைய நம்பிக்கை உள்மனத்தில் பொதிந்து கிடக்கும் அபார சக்திகளைத் தூண்டித் தீராத நோய்களையும் தீர்த்துவிடும் என்பதைத் தற்கால மானஸ சாஸ்திரிகளும் ஒப்புக்கொள்கிறார்கள்.

இந்த உண்மையை உணர்ந்துதான்,

தொழுமின்: அவனைத் தொழுதால்,
வழிநின்ற வல்வினை மாள்வித்(து),
அழிவின்றி ஆக்கம் தருமே!

பணிநெஞ்சே! நாளும் பரம்பரனை:
பிணி ஒன்றும் சாரா!

என்றெல்லாம் நெஞ்சை நோக்கியும், ஜனங்களை நோக்கியும் உபதேசிக்கிறார் ஆழ்வார்.

ஆனால் தொழுகிற மனம் தூய மனமாயிருக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறார். அப்போதுதான் நம்பிக்கை உண்மையாகும்: நன்னம்பிக்கையாகும்.

## அனுபவ ஞானம்

ஆழ்வார் வெறும் 'சாஸ்திரம்' பேசவில்லையாம். அனுபவத்தை ஒட்டியே இப்படிப் பேசுகிறாராம்.

கண்டேன் கமல மலர்ப்பாதம்: காண்டலுமே
விண்டே ஒழிந்த, வினையாயின எல்லாம்!

பிடித்தேன்: பிறவிகெடுத்தேன்
பிணிசாரேன்!

என்பது சுய சரித்திரம்: ஈச்வர சன்னிதியிலே பாடி வைத்தது; பிறர் கௌரவிக்க வேண்டுமென்று விளம்பரமாகச் சொல்லி வைத்ததன்று.

இந்த ஸ்வானுபவம்,

வினையேன் வினைதீர் மருந்தானாய்!

என்று இவர் கடவுளை அழைக்கும் போதும் வெளிப்படுகிறது. இதே மருந்தைத் தம்மைப்போல் வேறு சிலரும் உபயோகித்துப் பார்த்தார்களாம்: உபயோகித்தவர்களெல்லாம் பலன் அடைந்திருக்கிறார்களாம்.

அறிந்தனர் எல்லாம், அரியை வணங்கி
அறிந்தனர், நோய்கள் அறுக்கும் மருந்தே!

என்று அவர்களுடைய அனுபவத்தையும் எடுத்துக் காட்டுகிறார்.

எனினும் இவருக்குச் சொந்த அனுபவமே நம்பிக்கையின் உறுதியான அடிப்படையாகிறது. அந்த அடிப்படையைக் குறித்து இன்னும் கொஞ்சம் தெளிவுபடுத்திக் கொள்வது நலமாகும்.

## கடவுளுண்மை

கடவுள் தாயும் தந்தையுமாகி, அறியாதனவெல்லாம் அறிவித்து உபகரிக்கிறாராம். அந்த உபகாரங்களை அளவிட்டு அறிய முடியாதென்று சொல்லுகிறவர், அவனருளால் தமக்கு ஒரு குறையும் கிடையாதென்கிறார். அவனுடைய குணங்களை நினைத்துக்கொண்டிருக்கும் நெஞ்சில் குறைகளுக்கு இடம் ஏது?

கடவுளை உண்மையாகக் காண விரும்பினால், காணலாம்,—நெஞ்சென்னும்உட்கண்ணைத் திறந்து. இந்தக் கண் இல்லாதவர் குருடர்தான், இரண்டு கண்ணும் துலாம்பரமாயிருந்தாலும் கூட! இந்தக் கண்ணுள்ள அன்பர்களுக்கோ அவன் எளியவன்.

கடவுள் - வேந்தனுடைய அரண்மனைக்கு இரண்டு வாசல்கள், பெருமையென்றும் எளிமை யென்றும்: முந்தின வாசலை நெருங்கவும் முடியாது; பிந்தின வாசல் வழியாகத்தான் அவனை அண்டயலாம். ஈச்வரனுடைய பெருமை அல்லது மேலான நிலையைப் பரத்வம் என்றும், எளிமையை ஸௌலப்யம் அல்லது சுலபனாகும் தன்மை என்றும், வைஷ்ணவர்கள் கூறுவதுண்டு.

எல்லாப் பொருள்களுக்கும், எல்லா உயிர்களுக்கும் மேலானவன்தானே எங்கும் வியாபித்து நம்மையும் ஆட்கொள்ளச் சித்தனாயிருக்கிறான் என்று கூறுகிறவர், அவனை அடையும் உபாயத்தை,

அகலில் அகலும்; அணுகில் அணுகும்

என்ற வாக்கியத்தில், ஒரு சூத்திரம் போல வெளியிடுகிறார்.

அவனை நாம் (இதயப் பிரதேசத்திலே) நெருங்க நெருங்க, அவன் எவ்வளவு வேகமாக நம்மை நோக்கி நெருங்கி வருகிறான், தெரியுமா? நாம் ஓரடிவைத்தால் அவன் ஓராயிரம் அடி வைப்பானென்று நம்புகிறார்கள் பக்தர்கள்.

## அவதார உண்மை

கிணற்றிலே விழுந்த குழந்தையை எடுக்கத் தாயும் அந்தக் கிணற்றுக்குள் குதிப்பதுபோல் பகவான் தன்னுடைய பரத்வத்தை எங்கேயோ வைத்துவிட்டு இந்த உலகில் அவதாரம் செய்து தருமத்தை நிலைநிறுத்துகிறான். இந்த அவதாரங்களில் கிருஷ்ணாவதாரத்திற்கு அடுத்தபடியாக ராமாவதாரமும், ராமாவதாரத்திற்கு அடுத்தபடியாக மற்ற அவதாரங்களும் நம்மாழ்வார் இதயத்தை வசீகரித்தன—என்று சொல்லலாம்.

உதாரணமாக, நரசிம்மாவதாரம் இவர் கவனத்தை எப்படிக் கவர்ந்திருக்கிறது! கடவுள் அந்தர்யாமியாக எங்கும் ஓர் அணுவிடாமல் வியாபித்திருக்கிறார் என்பதையும், தருமத்திற்கு இணங்க வாழ்ந்த பிரகலாதன், அந்த விச்வரூபத்தில் ஆரோக்கியமுள்ள ஓர் அம்சமாயிருந்தான் என்பதையும், கொடுங்கோலனான இரணியன் நோய் பிடித்த அம்சமாயிருந்து அழிந்தான் என்பதையும் நரசிம்மாவதாரத்தின் கதை எவ்வளவு நன்றாக எடுத்துக் காட்டுகிறது!

பிரகலாதன் நெஞ்சிலிருந்த கடவுளே இரணியன் நெஞ்சிலும் இருந்தான்: எனினும் பிரகலாதனை அறக் கருணையாலும், இரணியனை மறக் கருணையென்ற ரணசிகிச்சையாலும் திருத்த வேண்டியதாயிற்று! இந்தக் கொள்கையை ஆழ்வார் இரணியன் கதையை வைத்துக்கொண்டே இன்னும் தெளிவுபடுத்துகிறார்:

என்னெஞ்சத்துள் இருந்(து)இங்(கு)
இருந்தமிழ்நூல் இவைமொழிந்து,
வல்நெஞ்சத்(து) இரணியனை
மார்விடந்த வாட்டாற்றான்
... ... ... ...
... ... ... ...
நன்னெஞ்சே! நம்பெருமான்
நமக்கருள்தான் செய்வானே!

என்று பாடுகிறார்.

இரணியன் நெஞ்சு, அன்பும் அறமும் நுழையாத வன்னெஞ்சம். எனவே அதைப் பிளந்துதான் திருத்த முடிந்ததாம், அந்த நெஞ்சிலிருந்த பகவானுக்கு. ஆழ்வாருடைய இளகிய நெஞ்சிலே வந்ததும், அதே பகவான் தன்னை லோகோபகாரமான தமிழ்ப் பிரபந்தங்களாக வெளியிட்டுக் கொண்டானாம். எப்படியும் அவன் நமக்கு அருள்செய்ய வேண்டுமென்றே நெஞ்சில் வந்து வீற்றிருக்கிறான்—என்கிறார்.

அவதாரங்களிலும், அவற்றைக் குறிக்கும் கதைகளிலும் உள்ள நம்பிக்

கையைக் காட்டிலும், "ஸர்வேச்வரன் ஸர்வவியாபகனு யிருக்கிறுன்" என்ற நம்பிக்கை பக்தர்களுடைய உயர்தர வாழ்க்கைக்குத் தாரகமா யிருக்கிற தென்று சொல்லவேண்டும்.

பாரும்நீ! வானும்நீ! காலும்நீ! நீயும்நீ!
நீரும்நீ - ஆய்நின்ற நீ!

என்று கடவுளை வழிபடுகிறவருக்கு, உலகமே கடவுள் மயமாயிருக்கிற தல்லவா?

"அண்டத்திலும், அண்டத்திற்கு அப்பாலும் உள்ள கடவுள், நம்முடைய உடலிலும் உள்ளத்திலும் இருந்து வழி காட்டுகிறுர்" என்ற நம்பிக்கை எவ்வளவு உயர்ந்த தன்னம்பிக்கையாகப் பிரகாசிக்கக் கூடும்! "உலகுக்கு ஓர் உயிரானவன், அடியார்களுடைய நெஞ்சையே மேலான திருப்பதியாக மதித்துக் கோயில்கொண்டிருக்கிறுன்" என்ற நம்பிக்கை யுள்ளவர்கள், பிரகலாதனைப் போலவே, "எங்களுக்கு என்ன நேர்ந்தால் என்ன? எங்களை ஒருவராலும் உபத்திரவிக்க முடியாது!" என்ற உறுதியோடு ஸாத்விக வாழ்க்கை நடத்துவார்கள்—என்பது நம்மாழ்வாரின் நம்பிக்கை. அப்படிப்பட்ட கடவுள்—நம்பிக்கையுடன் பரம ஸாத்விக வாழ்வு வாழவேண்டுமென்பது நம்மாழ்வாரின் உபதேசம்.

---

பொது ஜனங்களுக்கு லிவர் பிரதர்ஸ் கம்பெனியாரின் அறிவிப்பு நெ. 3

# சோப் அதிகநாள் நீடிக்கும்




# கவனத்துடனிருங்கள்

ஆரோக்கிய மாயிருக்க, விடு, ஆடைகள், சரீரம் இவைகள் சுத்தமாயிருத்தல் வேண்டும். இதற்காக ஒவ்வொருவருக்கும் சோப் வேண்டியது அவசியம். ஆனல், சோப் தயாரிப்பதற்கு வேண்டிய மூலப்பொருள்கள் இந்த யுத்த காலத்தில் ஏராளமாக கிடைக்காததால், தேவைக்குப் போதிய அளவுக்கு சோப் கிடைப்பது அரிதாகிறது. ஆகவே, சிறிது கவனம் செலுத்தி, உகங்ள் சோப்பை அதிகநாள் நீடித்து வரும்படி செய்யுங்கள். இதற்கு கீழேயுள்ள சில குறிப்புகள் உதவியாயிருக்கும்.



## சோப்பைத்தண்ணீரில் ஊறவைக்காதீர்கள்

உபயோகிக்கும் பொழுது சோப் சிறிது நேரங்கூட தண்ணீரிலிருக்கலாகாது சோப் வெகு சீக்கிரத்தில் கரையுமாதலால், சிலநிமிஷங்கள் அநாவசியமாக ஊறினலும் ஒரு குழந்தை குளிப்பதற்கு வேண்டிய சோப் வீணுகி விடும். ஆகையால் சோப்பை தண்ணீர் வடியும்படியாக கம்பிக் கூடையிலோ அல்லது ஒரு கிண்ணத்திலோ வைக்கவேண்டியது. இவ்வாறு அதை உலர வைத்தால், நாள் நீடித்துவரும். கடைசிச் சிறு துண்டு வரை உபயோகிக்கலாம்.

## பழைய துண்டை புதிய சோப்புடன் ஒட்டுங்கள்



சோப்பின் கடைசி துண்டை எறிந்து விடாதீர்கள். அதையும் புதியசோப்பையும், தண்ணீரில் நனைத்து இரண்டையும் சேர்த்து ஒட்டி, பிறகு உலரவையுங்கள். சிறிய துண்டு புதிய கட்டியுடன் ஒட்டிக் கொள்வதனுல் கடைசி வரை உபயோகிக்கலாம். இந்த முறையை ஸன்லைட், லைப்பாய், லக்ஸ் டாய்லெட் எல்லா சோப்புகளுக்கும் அனுஷ்டிக்கலாம்.

## ஆனல் அதிகசிக்கனமாகஇருக்காதீர்கள்!

நீங்கள் உபயோகிக்கும் சோப் விஷயத்தில் கவனமாக இருக்கவேண்டும் என்று நாங்கள் சொல்வதின் நோக்கம் சோப்பை நீங்கள் குறைத்து உபயோகிக்க வேண்டுமென்பதல்ல. சுத்தமாயிருக்க சோப் அவசியம். சரீரமும், ஆடைகளும் சுத்தமாயிருத்தல் ஆரோக்கியத்திற்கவசியம். ஆகையால் தினந்தோறும் உங்கள் ஆடைகளையும், சரீரத்தையும் சுத்தமாக வைத்துக் கொள்ளுங்கள். ஆனல் சோப்பை வீணக்காதீர்கள்.

## லிவர் பிரதர்ஸ் நல்ல சோப் உற்பத்தியாளர்கள்

ஸன்லைட் • லைப்பாய் • லக்ஸ் டாய்லெட் • லக்ஸ் லைப்பாய் டாய்லெட் • விம் • மங்கி பிராண்டு

L.COM.33-172TM

# மதுரை மணி ஐயர்

[ஸ்ரீ ய. மஹாலிங்க சாஸ்திரிகள், எம். ஏ., பி. எல்.]

ஸுச்ருதி :—கொஞ்சம் சந்தோஷப் படுமே.

ஜீர்ணச்ருதி :—ஏன், எதற்காக ?

ஸு :—நான் சந்தோஷப்படுகி றேன். என்னைப் பார்த்து நீரும் சந் தோஷப்படும்.

ஜீ :—நீர் சந்தோஷப்பட்டால் என க்கு என்ன ஆச்சு? உமக்கு 'ட்யூஷ'னுக் குப் போன இடத்தில் நல்ல 'டிபன்' கிடைத்ததாக்கும் !

ஸு :—உமக்கு எப்போதும் சாப் பாட்டு ஞாபகம்தானே !

ஜீ :—இல்லாவிட்டால், உம் முகத் தழகைப் பார்த்துச் சந்தோஷப்படவா? கோபுர வஸ்து மாதிரி புகையிலே போட் டுக் கன்னங்களை நிரப்பிக்கொண்டு எதி ரில் இருப்பவர்களுக்கு அழகு காண் பிக்கிறதுபோல் முகத்தை ஆட்டிக் கொண்டு நீர் பேசும் அழகைப் பார்த்தா நான் சந்தோஷப்படுவது ?

ஸு :—நல்லது. சற்றுக் கவனித்து என் அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளும். என் முகமே உம் கண்ணில் படக் கூடாது. என்னையே நீர் மறந்துவிட வேண்டும். என் மனத்திலிருக்கும் சந் தோஷத்தை மட்டும் நீர் பெற்றுக் கொண்டு அனுபவிக்கவேணும்.

ஜீ :—இது என்ன ஐயா? வேதாந்தம் படிப்பவர் சொல்லுவதுபோல் இருக்கி றது. குரு சிறுவனும் ; சிஷ்யர்கள் வயோதிகர்களாம். குரு மௌனமாம் : சிஷ்யர்களுக்குச் சந்தேகங்கள் தெளிந்து விட்டனவாம். என்ன ஐயா! 'மேஸ்மேரி ஸம்' செய்யப்போகிறீர்களா, என்ன ?

ஸு :—ஓய் கிழவரே ! அப்போதே உம்மை புத்தியை உபயோகப்படுத்தும் என்று சொன்னேனல்லவா ? சங்கீதம் ஒரு 'மெஸ்மெரிஸம்' தான் !

ஜீ :—ஓஹோ ! புரிந்தது. சங்கீதத் தைப்பற்றியா பேசுகிறீர் ? இப்போது நீர் என்ன வைதாலும் கேட்டுக்கொள்கி றேன். சமீபத்தில் யார் பாட்டுக் கேட் டீர் ? என்ன சமாசாரம் ? இந்த நவ ராத்திரி வீண் போகவில்லைபோலிருக்கி றது! திருவனந்தபுரம் போயிருந்தீரோ?

ஸு :—திருவனந்தபுரமோ, திருவா லங்காடோ போயிருந்தேன்.

ஜீ:—ஓஹோ!மச்சினன் அகத்துக்குப் போயிருந்தீரா ? திருவாலங்காட்டில் அக்ரஹாரம் சின்னக் கோவிலில் நவ ராத்திரி உத்ஸவத்திற்குச் சங்கீதக் கச் சேரி நடக்கிறதாமே, அங்கு யார் யார் பாடினார்கள் ? சொல்லுமையா! இந்தக் கிழத்தை அழைத்துக்கொண்டு போகக்கூடாதா ?

ஸு :—இனி எங்கே கச்சேரிகள் நடந்தாலும் சுருதி மண்டலத்தின் முக் கிய அங்கத்தினருக்கு அழைப்பு அனுப்பவேண்டுமென்று நாம் ஒரு தீர் மானத்தைச் செய்து 'பேப்பர்'களில் பிரசுரம் செய்யவேண்டும்.

ஜீ :—நீர் தீர்மானத்தைப் பண்ணி வெற்றிலைப் பெட்டியில் போட்டுக் கொள்ளவேண்டியதுதான். நம்மை எல் லாம் யார் சட்டைபண்ணுகிறார்கள் ? ஐயா ! இந்தக் காலத்தில் நம்மை அவர் கள் மதிக்கவேணுமானால், நாம் வேறு வழிகளில் இறங்கிவிட வேண்டும். அதெல்லாம் நம்மால் முடியாது. அது கிடக்கட்டும். நான் கேட்காவிட்டாலும் ரஸிகரான உம்மிடம் கேட்டுத் தெரிந்து கொண்டால், எனக்கு நேரில் கேட்ட தற்கு மேல்—என்றார் காளிதாஸ கவி.

ஸு :—என்னைப் பாடச் சொல்லுகி றீரா ? பிறரைப்போல் பாடினால் அது விகடமாகும் ; பாட்டாகாது.

ஜீ :—நீர் என்னை ஏன் இப்படிக் கண் கலங்க அடிக்கிறீர்? முதலில் சந்தோஷப்படச் சொன்னீர். பிறகு ஏதோ சங்கீத விஷயம் என்றும், கச்சேரிகள் கேட்டதாயும் சொன்னீர். அதற்குமேல் ஒன்றும் சொல்லமாட்டேன் என்கிறீர். இது என்ன உமக்கு வேடிக்கையா? உம்முடைய குறும்புத்தனம் உம்மை விடமாட்டேனென்கிறதே!

ஸு :—உமக்கு என் பேச்சின் அந்தரங்கத்தைக் கவனித்தறிந்து எனக்கு உத்ஸாகம் உண்டாகும்படி வார்த்தை கொடுத்துவரச் சாமர்த்தியம் போதாது.

ஜீ :—என்ன ஐயா! மூடுமந்திரம்? என்ன தேவரகஸியம்? இது என்ன பிரமாத விஷயம்? ஏதோ எல்லாரையும்போல் இங்கே போனேன், இன்ன பாட்டுக் கேட்டேன், இந்தமாதிரி இருந்தது—என்று சகஜமாய்ப் பேசாமல் வெகு பிசுக்கும் அமுத்தலும் காட்டுகிறீர்; புதிர்போடுகிறீர்! இந்தக் கிழவன் என்றால் உமக்கு அவ்வளவு இளப்பம்! உம்முடைய துஷ்ட சுபாவத்திற்கு இங்கு ஸர்வச்ருதி இருந்தால் கண்ட கோடாலி போட்டுக்கொண்டே இருப்பார்! திருவாலங்காட்டில் என்ன அபூர்வமாய் நான் கேட்காத கச்சேரி கேட்டுவிட்டு என்னை இப்படி விரட்டுகிறீர்?

ஸு :—அபூர்வம்தான் நீர் கேட்காத பாட்டு.

ஜீ:—யார்? புதிதாக எவனாவது திருவையாறு கும்பகோணம் பக்கத்திலிருந்து கிளம்பியிருக்கிறானாக்கும்?

ஸு :—இல்லை, இல்லை; ஒரு ஜடாவல்லவர் பாடினார்.

ஜீ :—ஜடாவல்லவரா? வேதாத்யயனம் செய்த ஸங்கீத வித்வானைப்பற்றி இதுவரை நான் கேள்விப்படவில்லையே. அப்படியானால் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டியதுதான்.

ஸு :—அவர் அத்யயன ஜடாவல்லவர் இல்லை; ஸங்கீத ஜடாவல்லவர்.

ஜீ :—மறுபடி புதிர் போடுகிறீரே! உம் கொனஷ்டைக்கு............ நல்ல வேளையாக இதோ ஸர்வச்ருதியும் மற்ற அங்கத்தினரும் வருகிறார்கள்.

ஸர்வச்ருதி :— என்ன, ஸுச்ருதி அண்ணா! திருவாலங்காட்டில் மதுரை மணி ஐயர் பாட்டு நடந்ததாமே?

ஸு :—ஆமாம், இந்தக் கிழவருக்கு அதைப்பற்றித்தான் சொல்லிக்கொண்டிருந்தேன்.

ஜீ :—அடே, உன் பொய் பாழ்க்க! எனக்கு நீ என்ன சொல்லிக்கொண்டிருந்தாய்? என்னை முதலில் சந்தோஷப்படச் சொல்லிவிட்டு அழவைத்தாய்! பின்பு ஜடாவல்லவர் ஸங்கீதக் கச்சேரியில், யானை சைகிள் விட்டதுபோல், ஏதோ செய்ததாகச் சொன்னாய். மணியைப்பற்றி ஒரு வார்த்தை பேசவில்லை. ஏன் இந்தப் போக்கிரித்தனம் உனக்கு?

ஸு:—போங்காணும்,போம். உமக்கு அறிந்துகொள்ளப் புத்தி யில்லாவிட்டால் யாரிடம் கோபித்துக்கொள்ளுகிறீர்? ஒருவன் மனத்தில் இருக்கும் சந்தோஷம் மற்றொருவன் மனத்திற்கு எதனால் பரிமாறப்படும்?

ஸர்:—ஸங்கீதம் ஸாஹித்யம்முதலிய கலைகளினால்தான். இதுவிஷயம் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் சொல்லியிருக்கிறார் அல்லவா?

ஸு :—ஆனந்தம் என்பது பிரம்ம ஸ்வரூபம். அதை நாம் அனுபவித்தால், நம் எதிரிலிருப்பவர்களும் அனுபவிப்பார்கள். நீர் சொன்ன வேதாந்தப் பேச்சே இங்கு உதாரணமாகும். ஆத்மானந்தத்தை அனுபவிக்கும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸந்நிதியில் மௌனத்தினாலேயே சிஷ்யர்கள் அஞ்ஞானம் நீங்கிப் பேரின்பத்தைஅனுபவிக்கின்றனர்! ஸங்கீதத்தின் ஆனந்தக்கலை ஸச்சிதானந்தம் என்ற பிரும்மத்தின் பரிபூர்ண ஸ்வரூபத்தில் ஒரு திவலையைப்பற்றிக்கொண்டிருக்கிறது! அவ்வானந்தகலை நிரம்பிய சங்கீதம் கேட்போர்களுக்கும் துக்கத்தை மறக்கடித்து ஆனந்தத்தை அளிக்கிறது. மணி ஐயர் பாட்டு ஆனந்தம் பொங்கும் பாட்டு. அவர் நிச்சயமாய்த் தன்னை மறந்து ஆனந்தத்

தில் லயிக்கிறார். தன்னை மறந்தவன் பக்க வாத்தியத்தில் ஏறல் தாழல்களைப் பாராட்டமாட்டான். அவைகளில் ஆனந்தக் கலையிருந்தால் அனுபவிப்பான். அசடு இருந்தால் அவனுக்கு அதில் ஞாபகம் செல்லுவதில்லை. ஆதலால்தான் மணி ஐயரும் பக்கவாத்தியம் எதுவானாலும் அங்கீகரிப்பதுடன், பக்க வாத்தியக்காரர்களோடு இவர் ஒரு பக்கம் அவர்கள் ஒரு பக்கமாக இழுப்பது கிடையாது. மூவரும் ஏகோபித்து ஆனந்தத்தில் மூழ்குவார்கள். அவருக்கு கஞ்சிரா கடம் என்ற பிக்குப் பிடுங்கல் பிடிக்காது. மேலும் ஜனக் கூட்டம் சிறிதாகிலும் பெரிதாகிலும், பணக்கச்சேரியானாலும் இனும் கச்சேரியானாலும், ஒன்றும் அவருக்கு ஞாபகத்தில் இராது. நிசப்தமான இரவிலேயே பாடவேணும் என்பார். தம் பூரா சுருதியைத் தாளித்துக்கொண்டு நாதப்பிரம்மத்தை ஆவாஹனம்செய்து அதில் லயித்துவிட்டால், பிறகு படிப் படியாக ஆனந்த சிகரங்களில் ஏறி உலாவுவார்! நாழிகை ஆக ஆக, அதாவது உச்சியில் ஏற ஏற, அவருக்குக் கீழே இறங்க மனம் வராது. மணி நாலானாலும் நிறுத்தச் சொன்னால், அவர் தம் சந்தோஷத்தை யாரோ கெடுப்பது போல் அரை மனத்துடன்தான் நிறுத்துவார். இந்த அம்சத்தில் கொஞ்சம் இவரைப் போன்ற திருவாலங்காடு சுந்தரேசய்யரே அன்று பக்கவாத்தியம் வாசித்ததால், மிகவும் ஒற்றுமையாக இருந்தது.

ஸர்:—மணி ஐயர் பாட்டில் முக்கியமாய் எடுத்துச் சொல்லவேண்டிய விஷயம் இதுதான்.

ஜீர்:—ஜடாவல்லவர் என்று சொன்னீரே, அவர் யார்?

ஸா:—மணி ஐயர் தான்.

ஜீர்:—அவர் அத்யயனம் பண்ணியிருக்கிறாரா, என்ன?

ஸர்:—ஸாச்ருதி அண்ணாவின் கருத்து எனக்குப் புரிந்துவிட்டது. அவர் ஸ்வரம்பாடும் ரீதியை மனத்தில் வைத்துக்கொண்டு அவருக்கு இப்பெயரைக் கொடுக்கிறார் போலும். பெரிய வித்வான்கள் நடைகளைப் பலவாறு மாற்றி "கிர்" என்று சுற்றி, கடகடவென்று புரண்டு, கலகலவென்று உதிர்த்து, தாண்டியும் எம்பியும் குதித்து, ஸ்வரஸ்களைப் பரப்பி ஸங்கீத ரஸிகர்களுக்கு ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் கொடுப்பார்கள். மணி ஐயரோ ஸர்வ லகு நடையையே அதிகம் உபயோகப்படுத்தி, சிறு அலைகளுடன் மெல்ல மெல்ல ஊர்ந்து செல்லும் நதியில் படகு போவதுபோல் விச்ராந்தியாகவும் கச்சிதமாகவும், அடுக்கடுக்காக ஸ்வரங்களை, கலைந்த காய்களைக் கட்டங்களில் அடைப்பதுபோல் தாள இடைவெளிகளில் அடைத்துக் கொண்டு பாடுகிறார். வேதத்தில் கனம் ஜடை சொல்வதுபோல் ஸ்வரங்களைப் பின்னிப் பின்னி இவர் பாடுவது வழக்கம். அதற்காக ஸங்கீத ஜடாவல்லவர் என்று இவரைச் சொன்னது வேடிக்கையான பேச்சு.

ஸா:—ஸாச்ருதிக்கு 'வெகண்டை'ப் பேச்சுத்தானே பேசத் தெரியும்!

ஸர்:—மணி ஐயர் பால்யத்தில் மழவராயநேந்தல் சுப்பராம பாகவதர் ஸ்வரம் பாடுவதை மிகப் பாராட்டி வந்ததால், அந்தப் பாணி வெகுவாய் இவரிடம் அமைந்துவிட்டது. ஆவேசமில்லாமலும், தொடை தடித்துப் போகாமலும், தலைவிரிகோல மில்லாமலும் ஸ்வரம் பாடும் பாணி இது. எப்படித் தாழ்ந்து பறக்கும் காக்கைக்கு உள்ள சிறகடித்தல் உயர்ந்து பறக்கும் கருடனுக்குக் கிடையாதோ, அப்படியே முதிர்ந்த ஸ்வர ஞானிகளுக்கு அகண்டமான ஸ்வர விந்யாஸங்களில் நிம்மதியாய்ச் சஞ்சரிப்பது இயல்பானது. இவர்களெல்லாம் தாள யோகிகள் என்று பவபூதி சொன்னதுபோல், இவர்கள் கூப்பிடும் இடத்தில் தாளம் தாஸனைக் காத்துக்கொண்டு நிற்கும்!

ஸா:—மணி ஐயர் விஷயத்தில் 72 மேள கர்த்தாக்களில் அடங்கிய பிரக்ருதி விகிருதி ஸ்வரங்களும் அப்படியே என்று சொல்லலாம்.

# சத்திய யுகத்தில்

['பௌராணிகன்']

குதூகலமான வசந்தகால மாலை. சித்ரா பௌர்ணமி தினம். தெருக்களில் ஜலம் தெளித்துக் கோலமிடுகிறார்கள் பெண்கள். குழந்தைகள் தெருக்களில் விளையாடுவதைப் பார்க்க ஒவ்வொரு வீட்டுத் திண்ணையிலும் முதியோர்கள் கூடுகிறார்கள். ஸ்திரீகள் துளசி மடத்திற்குப் பூஜை செய்துவிட்டு 'கோ பூஜை'க்காக (பசுக்களைப் பூஜிப்பதற்காக) மேய்ச்சலிலிருந்து திரும்பும் கிரக லக்ஷ்மிகளை வரவேற்க ஆய்த்தமாகிறார்கள். வேப்பம் பூவின் மணமும் மல்லிகையின் மணமும் கலந்து கிராமம் பூராவும் பரவுகின்றன.

சத்திய யுகத்தைப்பற்றியே சதா எண்ணமிட்டுக் கொண்டிருக்கும் ஆறுமுக நாயக்கருக்குச் சத்தியயுகமே பிரத்யட்சமாகி விட்டதுபோல் தோன்றியது. அவர் திரும்பின திக்கெல்லாம் சாந்தமான குதூகலம். பல வேறு தொழிலாளிகளின் முகங்களிலும் ஒரே விதமான ஆனந்தத்தின் அறிகுறியாகிய புன்சிரிப்பையே பார்த்தார். சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு நேர்மையுடன் கடமை என்றே தொழில் புரிபவர்களிடம்வேற்றுமை காணப்படாதல்லவா?

ஊரின் சோலையைக் கடந்து நாயக்கர் ஆற்றங்கரையை அடைந்தார். நதியின் நிர்மலமான ஜலமும், அதிக வேகமில்லாமல் சலசலவென்று ஓடும் சுருதியும், சாந்தமான நாதத்தில் லயித்து மனத்தைப் பரவசப்படுத்தின. ஆற்று மணலில் துணியை விரித்துப் படுத்தவண்ணம் சிவந்த கதிர்களுடன் கூடிய கதிரவன் அழகில் ஈடுபட்டார். மேல்திசையில் கதிரவன் செந்நிறம் ஏற ஏற, 'ஏது இவ்வளவு சந்தோஷம்?' என்று திரும்பிப் பார்க்க அவர் கண்ட காட்சி மனத்தைக்கொள்ளை கொண்டது. கதிரவன் அழைக்க அன்ன நடையுடன் பின் தொடரும் காதலியை ஒத்துப் பூர்ண சந்திரனும் ஸ்வர்ண மயமான வெண் தாமரையைப் பழிக்கும் காந்தியுடன் கீழ்த்திசையிலிருந்து கிளம்பியது. அது சத்திய யுகத்தில் இருளில்லாத இரவு வரும் போலும்!—என்பதை ஞாபக மூட்டியது.

"ஒவ்வொரு ஞானிக்கும் எப்பொழுதும் காட்சியளிக்கும் ஆனந்த யுகம் அது" என்று சொல்லிக்கொண்டே, பரஞ்சோதியாரும் நாயக்கரின் பக்கலில் வந்தமர்ந்தார். "இந்த யுகத்தில் இருளில்லாத இரவும், வேற்றுமையே தோன்றாத ஒரே ஆனந்தமும் தான்! பாரும்" என்றார் நாயக்கரும்.

பரஞ்:—ஆம். இந்தப் பௌர்ணமியும் தேய்பிறையாக மாறாமல், அந்தக் கதிரவனும் மேல்திசையில் மறையாமல், நம்வயிறும் பசி தாகம் அறியாமல்,நீடித்திருந்தால் சத்தியயுகத்தில் வேறு காரியக்கிரமங்களே இல்லைதான். இந்நிலையில் ஆராய்ச்சி செய்தால் நிம்மதியைக் கொடுக்கும் பல உண்மைகள் புலப்படும். இது காலசக்கரம் சுற்றாதிருக்கும் நிலை. இதோ சுற்றும்போலிருக்கிறது. பிரமையும் தட்டும். சற்றே விவரியுங்கள் இச் சத்திய யுகம் யாருக்கென்று.

ஆ:—ஒவ்வொரு ஞானிக்கும்தான். அவரவர்களின் அறிவின் வளர்ச்சிக்கு ஏற்றவாறு இந்த யுகமும் விளங்கும்.

ப:—அப்படியானால் எக்காலத்தில் எல்லோருக்கும் இச் சத்தியயுகத்தின் அனுபவம் கிட்டாதா?

ஆ:—தனித்தனியாகத்தான் கிட்டும். இதன் அனுபவமே இதன் பலன். அகத்தினுள் தோன்றும் ஜோதி, ஆனந்தத்தைப் பயக்கும். இவ்வானந்தம் எவ்வள

வுக்கெவ்வளவு ஏற்படுகிறதோ, அவ்வள வுக்கவ்வளவு நிஷ்காம்ய கர்மம் புரியும் யோகியாகவும் மாறுகிறான் ஒவ்வொரு வனும்.

ப:—பழையபடி சொல் லடுக்குகளில் ஈடுபட்டு விடுகிறீர்களே! இவ்வுலகத் தில் சத்திய யுக தத்வத்தை அறிந்து பயன்பெறும் உழைப்பாளிகள் காரியக் கிரமங்களை எவ்வாறு தொகுப்பார்கள் என்றுகூறுங்கள். இந்தத் தத்துவத்தைச் சிறிதும் அறியாதவர்களுடன் எப்படி விவகாரங்களில் ஈடுபடுவார்கள்? இவர் களின் ஆனந்தம் இடைஞ்சலுறாதா?— என்றவை போன்ற பல விஷயங்களையும் விவரித்துச் சொல்லும்.

ஆ:—ஆஹா! சொல்லும், எதற்காக ஒவ்வொருவரும் தொழில்கள் புரிகிறா ரென்று?

ப:—வயிற்றுப் பிழைப்புக்குத்தான் என்று எல்லோரும் சொல்லுகிறார்கள்.

ஆ:—அப்படியானால் பிழைப்புக்கு ஏற்பாடுசெய்து மற்றும் பல சௌகரி யங்களுக்கும் வசதிகள் செய்துகொடுத்து விட்டால், ஒருவிதத் தொழிலும் செய்ய மாட்டார்களா?

ப:—அப்போதும் செய்யத்தான் செய்வார்கள். மேலும் மேலும் தனத் தைக் குவிப்பதும், தங்கள் அதிகா ரத்தைப் பெருக்கிக் கொள்வதும் எப்பொழுதும் தணிக்க முடியாத தாக மல்லவா?

ஆ:—அதாவது, யாதொரு விதத்தி லும் ஆத்ம சுகத்தைப் பயக்க முடியா தென்று தெரிந்தும், மேலும் மேலும் தேவைக்கு மிஞ்சியே அதிகாரத்தை யும் தனத்தையும் பெருக்கிக்கொள்வது மனித இயல்பாகி விட்டதென்கிறீர். இவ்வித இயல்பு அழியாதவர்களுக்கும், சத்திய யுகத்திற்கும் வெகுதூரம். ஒவ் வொரு காரியமும் எவ்விதம் நமக்குத் திருப்தி என்னும் நிம்மதியைக் கொடுக் கத் தேவை என்று ஆராயப்பட்டுத் தான் தேடப்படும்—என்று நியமம் ஏற் பட்டால், மனோ ப்ராந்தி குறைய ஆரம் பிக்கும். காலசக்கரத்தின் வேகம் தணிய ஆரம்பிக்கும். சத்திய யுகத்தின் தத்து வங்கள் மனத்தில் பதிய சௌகரிய முண்டாகும்.

ப:—புலப்படுகிறது, நீங்கள் செய் கிற வியாக்கியானத்தின் தத்துவம்.

ஆ:—இவ்வித உண்மையறிவு ஏற் பட ஏற்படக் கர்மயோகியின் தத்துவ மும் மனிதனுள்ளத்தில் இடங்கொள் ளும். இந்திரியங்கள் இயற்கையின் சுபா வத்தால் வாளா இருக்கமாட்டா என் பதையறிந்து விருப்பு வெறுப்பற்றே காரியாதிகளில் ஈடுபடுவார்கள். மற்றைய ஜனங்கள் எவ்விதம்நினைப்பார்கள்என்று கவலைகொள்ளமாட்டார்கள். காரியாதி களினின்றும் பெருத்ததோர் ஊதியம் கிட்டுமென்ற நப்பாசை யற்றவர்கள் இந்த நிஷ்காம்ய கர்மயோகிகள்; கிடைத் ததைக்கொண்டு திருப்தியடைபவர்கள். கஷ்டமும் சுகமும் இருவித அனுபவங் களேயொழிய, இவர்களை விருப்பு வெறுப்பென்ற சுழலில் சிக்கவைக்கக் கூடியவைகளாக அமையா. இவ்விதம் தேர்ந்த பல பேர்கள் சேர்ந்த கூட் டத்தைச் சத்தியயுக வாசிகளென்று சொல்லலாமல்லவா? இச்சிறிய சமூகத் தில் எவ்விதம் உலக விவகாரங்கள் நடைபெறும் என்றுதானே ஆவலுடன் கேட்கிறீர்?

ப:—ஆம். தற்பொழுது காணப் படும் சண்டைகள், சச்சரவுகள், வியா பாரம், சூதாட்டம், அரசியல், இராஜ தந் திரச் சூது முதலியவைகளெல்லாமும் அந்த கூட்டத்தினரின் காரியக் கிரமங் களிலும் இடம் பெறுமா? விவரமாகச் சொல்லும்.

ஆ:—எல்லாம் நடைபெறும். தத் ரூபம் இக்காலம் இருப்பது போலவே காணப்படும். வக்கீல்கள், வைத்தியர் கள், தரகர்கள், கூலியாட்கள், மிராசு தாரர்கள், போலீஸ், துரைத்தன இலா காக்கள் ஒன்றிலும் குறைவுஇராது. ஒவ் வொருவரும் தங்கள் கடமை என்று காரியங்களை செய்வார்கள். லாப நஷ் டம் என்ற கணக்கு அவர்கள் சித் தங்களைப் பேதிக்காது. ஒருவரும்

நஷ்டமடைவதுமில்லை, லாபமடைவது மில்லை. தங்களுக்கொரு பலன் வேண்டு மென்பதற்காகக் காரியங்களில் ஈடுபட மாட்டார்கள்.

ப :—அப்படியானல் வக்கீல்களும் வைத்தியர்களும் ஊதியம் பெருமலே வேலை செய்வார்களா? மிராசுதார்கள் பண்ணையாட்களுக்கென்று நிலத்தை விட்டுக் கொடுத்துவிடுவார்களா? கூலி யாட்கள் கூலி வாங்கிக்கொள்ள மறுப் பார்களா? இதெல்லாம் நடக்கக்கூடி யதா?

ஆ :—அவசரப்பட்டு உண்மையை அறியமுடியுமா? சற்றுப் பொறுமை யுடன் கேளும், சொல்லுகிறேன். நீங்கள் சொல்லுகிறபடி யெல்லாம் தலைகீழாக உலகம் மாறிவிடாது. ஆனல் நிச்சயம் உண்மையாக உழைப்பார்கள். சுறு சுறுப்பாக வேலை செய்வார்கள். சோம்ப லிராது; நேர்மையாகவும் வஞ்சனை யில் லாமலும் காரியங்கள் நடைபெறும். இவ்விதம் காரியங்கள் நிகழ்வதிலேயே ஓர் ஆனந்தம் பரிணமிக்கும். காரியங் களின் பலன் 'அவன் விட்டவழி' என் றிருப்பார்கள்.

உதாரணமாக, வக்கீலையும் கட்சிக்கா ரர்களையும் எடுத்துக்கொள்வோம். ஒவ் வொரு கட்சிக்காரனும் தான் உண்மை யென்று நம்பியதை எதிர்க்கட்சிக்கார னுக்கு அறிவிக்கிறன். எதிராளி தான் உண்மையென்று நம்பியதற்கு விரோத மாக இக்கட்சிக்காரன் சொல்லுவதாகத் தோன்றவே ஆட்சேபணைகள் கிளப்புகி றன். ஒருவருக்கொருவர் வியவகாரத் தைப் பேசித் தீர்க்க முயன்றும் பொது வாக உண்மை ஒன்று என்று தோன்றி யும், அது யாதென்று தோன்றுமற் போகவே, தங்களினும் அதிக சாமர்த்தி யம் பெற்றவர்களென்று தோன்றும் வழக்கறிஞர்களாகிய வக்கீல்களைக் கலந்துகொண்டு தத்தம் கட்சிகளை விவாதிக்கச் சொல்லுவார்கள். வக்கீல் களும் உண்மையறிய இருதரப்பார் களின் வாக்குமூலாதிகளையும் பெற்றுத் தங்களுக்குள்ளே தீர்மானத்திற்கு வர முயலுவார்கள். அவர்களாலும் தீர்மான மடைய முடியாமற்போனல், பொதுவில் கேட்டு நியாயம் அல்லது உண்மை நிலையைப் பகுத்தறிந்து விளக்கும்படி ஒரு நியாயாதிபதியை நாடுவார்கள். நியாயாதிபதியும் பாடுபட்டு உண்மை துலக்குவார். இவ்வுண்மை இவ்வழக்கறி ஞர்களும் கட்சிக்காரர்களும் அறியும் படியான விதத்தில் துலக்கப்படும். இவ் வாறு முயன்று தோல்வியுறுவாரே யாகில், தன்னினும் மேம்பட்ட ஓர் அறி ஞரிடம் நியாயம் கேட்க யோசனை சொல்லுவார். விஷயாதிகளைத் தான் அறிந்த வரையிலும் விளக்கியும் கூறி யனுப்புவார். இதைத் தான் அப்பீல் என்று நடைமுறையில் சொல்லுகி ரும். இவ்விதம் உண்மை துலக்கப் பட்டால்கட்சிக்காரர்கள் இருவரும் ஆன ந்தமடைவார்கள். வெற்றி தோல்வி என்று கிடையாது. உண்மையை அறிய இருவரும் முயன்றார்கள். இருவ ருக்கும் பொதுவில் உண்மை அறியப் படவே, உவகை பூத்தார்கள் என்றே கொள்ளவேண்டும். வக்கீல்களுக்கும்நியா யாதிபதிக்கும் கூலி அவசியம் கொடுக் கப்படும். அவர்கள் செய்த உபகாரத் திற்குப் பிரதியுபகாரம் செய்யவேண்டு மென்பது சத்தியயுகவாசிகள் அறிந்து நடைமுறையில் அனுஷ்டிக்கும் விஷய மில்லையா?

இவ்விதமே வைத்தியனையும் நோயா ளியையும் எடுத்துக் கொள்வோம். நோயுற்றவன் நிலையைக் கண்டு உபகாரம் செய்ய வேண்டும் என்றே வைத்தியன் ஔஷதங்கள் கொடுக்கிறன். நோயாளி யும் வைத்தியனிடம் பக்தி சிரத்தை யுடன் நடந்துகொள்ளுகிறன் வைத்தி யன் சர்வக்ஞன் என்று எண்ணுவதில்லை. தனக்குத் தெரிந்தவரையிலும்சிகித்ஸை செய்து பார்த்துச் சந்தேகங்கள் ஏற்பட் டாலும், அல்லது தன் சக்தி மீறியது என்றாலும், உடனே தன்னிலும் மேலான அறிவும் ஆற்றலும் படைத்த வேறு வைத்தியனிடம் வியாதியைத் தெரிந்தவரையிலும் விவரமாகச் சொல் லிச் சிகித்ஸைசெய்யும்படிகேட்டுக்கொள் ளுவான். இந்த வைத்தியனும் கடமை

யென்று மதித்து அக்கரையுடன் பரிகாரங்கள் தேடுவான். நோயாளி குணப்பட்டால் இருவரும் சந்தோஷம் அடைவார்கள். நோயாளியைத் தங்கள் பந்துக்களில் ஒருவனுகப் பாவிப்பார்கள். இவ்வளவு பாடுபடுவதில் சலிப்பென்பது ஏற்படாது. ஊதியத்தைப்பற்றிய கவலேயும் இருக்காது.

வியாபாரியைபற்றி யோசனே செய்கிறீர்? அதையும்தான் கவனிப்போம். சத்தியயுக தத்துவத்தில் ஊறிய வியாபாரிவியாபாரத்தைப்புனிதமானகடமையாக மதிப்பான். தன்னேச் சுற்றியுள்ள ஜனங்களின் தேவைக்காகப் பல ஊர்களிலிருந்து பொருள்களேச் சேகரம்செய்து வருவான். தன்னூர்ப் பொருள்களேயும் வழியில் கிடைக்கும் பல பொருள்களேயும்வெளியூர்களுக்குப்போகையில் எடுத்துச்சென்று சௌகரியத்திற்கு விற்பனே செய்வான். இவன் வியாபாரத்தில் சத்தியம் பிரதிபலிக்கும். வாங்குகிறவர்கள் சாமர்த்தியத்தைப் பொறுத்திருக்காது. விலே, பொருளின் தன்மை, அளவை முதலியவைகள் எல்லாம் விற்கிறவனின் மனச்சாட்சியைக்கொண்டே நிர்வகிக்கப்படும். லாபம் என்பது நியாயமாக அவனுக்குவேண்டிய தேவையைக்குறிக்கும்படி இருக்கும். வாங்குகிறவர்களும் மனமொப்பி இந்த லாபத்தைக்கொடுக்க இசைவார்கள்.

மிராசுதார்களும் பண்ணேயாளும் ஒத்துழைக்க முடியுமா என்றுதானே கேட்கிறீர்? ஏன் முடியாது? சத்தியம் சகஜம்; அசத்தியம் செயற்கை என்பது போல், ஒத்துழைப்பது இயற்கை—ஒத்துழையாமை செயற்கை என்று எல்லோரும் ஒப்புக்கொள்ளுவார்கள். சத்தியயுகம் அல்லது இயற்கையைக் கடைப்பிடித்தல்என்பதே நியதி. பண்ணேயாளே ஏமாற்றிக் கசக்கி வேலே வாங்கும் மனப்பான்மை ஒழிந்தால், பண்ணேயாளும் திருடியும் ஏமாற்றியும்பிழைத்தாலொழியப் பிழைக்க முடியாது என்ற மனப்பான்மையை ஒழிப்பான். அதிகம் உள்ள மிராசுதார், இல்லாமையில் உழலும் பண்ணேயாளுக்குச் சிறிது அதிகம்தான் கிடைக்கட்டுமே என்று கொஞ்சம் தாராள மனத்தைமுதலில் உபயோகிக்க வேண்டும். நிலம் மிராசுதாருக்குத் தற்பொழுது சொந்தமாகிவிட்டது. ஏர்கட்டி உழுது தானியங்களே அறுவடை செய்யும் வரையில் வேலேயோ பண்ணேயாளின் ஏகபோக உரிமை என்பது இன்னும் பல காலத்திற்கு மறுக்க முடியாத உண்மை. இங்கிலேயில் அதிக லாபம் குறைந்த லாபம் என்றுகூற நியாயமில்லே. நிலத்தில் உழைத்தவன் நிம்மதியாக வாழ்ந்து உழைக்க வழிசெய்வது நிலத்துச் சொந்தக்காரன் கடமை. ரூபாய்க் கணக்கிலும் கலம் கணக்கிலும் பேசத் தேவையில்லே. வயிருர உண்ணச் சோறு கொடுத்து உழைக்கச்செய்து, மேற்கொண்டு அறுவடையாகிச் சகல செலவு செய்து மிராசுதார் குடும்பச் செலவும் செய்து ஏதாவது மிஞ்சினுல் அதில் ஒரு பாகம் மிராசுதாரின் உண்மை வாரிசாகிய பண்ணேயாட்களும் அடைய மனமொப்பி ஒதுக்கி வைக்க மிராசுதார் ஏற்பாடு செய்தால், சத்திய யுகம் அவர்களுக்கே பிரத்தியட்சம் என்று கூறவும் வேண்டுமோ? இவ்விதம் காரியக்கிரமங்கள் நடந்தால் நாற்றுப்பிடுங்குகையிலும், நடவுநடுகையிலும், போர் அடிக்கும்போதும், கலம் கூட்டும்போதும், பிறகு வீட்டிற்கு நெல் வந்து சேரும்போதும் கண்குத்திப் பாம்புபோல் மிராசுதார் அல்லது அவருடைய காரியஸ்தன் பண்ணேயாளுடன் பண்ணேயாளாய் வெயிலிலும் மழையிலும் சேற்றிலும் சகதியிலும் அவஸ்தைப்பட்டு ஒரு காரியமும் செய்யாமல் சந்தேகப் பிரகிருதியாக உழலவேண்டியிருக்காதல்லவா?

ப:—இதெல்லாம் ஒருவாறு நடைமுறையில் சாத்தியமாகிறவைகளே. ஆனுல் குற்றவாளிகளே இருக்கமாட்டார்களா? போலீசாருக்கு வேலே இருக்காதா?

ஆ:—அதையுந்தான் ஆராய்வோம். போலீஸ் ஜனசமூகத்தின் உண்மை அன்பனுய்ப் பிரதி ஒருவனும் தவறு செய்ய எத்தனிக்கும்பொழுதே




# T.V.S. முன்னிற்கிறது!



T. V. S. கியாஸ் பிளாண்டுகள் மூன்று வருஷ காலமாக விற்பனையாகி வருகின்றன. இந்தியாவில் இன்று 4,000-க்கு மேல் உபயோகத்திலிருக்கின்றன. இதன் சிறந்த உழைப்பையும், சிக்கனச் செலவையும் கண்டு, கார், டிரக் சொந்தக்காரர்கள் பூரண திருப்தி அடைந்திருக்கின்றனர். தமது வெகுநாளைய அனுபவத்தால்தான் T. V. S. இஞ்சினீயர்கள் தலைசிறந்த கியாஸ் பிளாண்டுகளைத் தயாரிப்பது சாத்தியமாகிறது.

இந்தப் பிளாண்டின் திறமையைப் பிரத்யக்ஷமாக காண்பிக்கும்படி டிஸ்ட்ரிப்யூட்டர்களிடம் கேளுங்கள்.

**பிரதான அம்சங்கள்**

- ஸ்டார்டிங் அதிசுலபம்:—சீக்கிரத்தில் ஸ்டார்ட் ஆகிவிடும்.
- மும்முறை வடிகட்டும் வசதி:—சுத்தமான கியாஸ். மேற்பார்வை செலவு குறைவு.
- சமகனம்:—டயர் தேய்வு குறைவு. பிரேக்கிற்கு பந்தோபஸ்து அதிகம்.
- மிகவும் நம்பிக்கையானது:—ஆரம்பத்திலிருந்து முடிவுவரை நம்பிக்கையான உழைப்பு.
- நேர்த்தியான தோற்றம்:—மற்றெல்லா பிளாண்டுகளையும்விட சிறந்த தோற்றம்.

வாங்குமுன் மாதிரிகளைப்




கியாஸ் பிளாண்ட் பாருங்கள்.

(கார், லாரிகளுக்கு ஏற்றவை)

**T.V. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ், லிமிடெட்**

மதுரை & சென்னை.

TVS.K - 7 TM.

முன்கூட்டி எச்சரித்துத் தவறு ஏற்படாத வண்ணம் பாதுகாக்கும். அப்படியே தவறு நடந்துவிட்டாலோ, அக் குற்றவாளியைக் கண்டுபிடித்துத் தண்டனை அடையும்படி செய்ய உழைக்கும். தண்டிக்கப்பட்ட குற்றவாளியும் இப் போலீஸின் பேருதவிக்கு நன்றியுடன் வந்தனமளிப்பான். தண்டனையும் நான் முன்பு விவரித்தப்படி குற்றவாளிக்கு உதவும் வகையில் அமையும்.

இவ்விதமே பலவேறு விஷயங்களையும் ஆலோசித்து உண்மை வழி அறியலாம். ஆனால் இவைகளெல்லாம் எல்லோருள்ளத்திலும் சத்தியம் குடிகொண்ட காலத்திலேயே!

இப்பொழுது ஒரு காரியக்கிரமத்தில் ஈடுபட்டு இருக்கும் இருபாலரில் ஒருவர் சத்திய யுகதத்துவத்தைக் கடைப்பிடிக்காதவராக இருந்தால், என்ன நேரிடும் என்று சந்தேகம் தோன்றுகிறது. இதை நான் அறிவேன். அதையும்தான் கூறுகிறேன். கேளுங்கள். நேர்மையுடன் ஒரு மனிதன் ஒரு தொழிலாளியின் உபகாரத்திற்குப் பிரதியுபகாரம் செய்யவில்லை என்று வைத்துக்கொள்ளுங்கள். இப்பொழுது நேர்மையுடன் நடந்து கொள்ளும் தொழிலாளி என்ன செய்ய வேண்டும் என்கிறீர்? ஏதாவது தந்திரங்கள் செய்து, அதாவது அசத்தியத்தின் உதவியைக் கொண்டு தனக்குச் சேரவேண்டிய பிரதி யுபகாரமாகிய கூலியை முன் கூட்டியே பன்மடங்கு அதிகமாகப் பற்றிக்கொள்ளுவது. சரி, இப்பொழுது தொழிலாளி சத்தியத்தைக் கடைப்பிடிக்கமாட்டான் என்று மாற்றி வைத்துக்கொள்ளுங்கள். அப்பொழுது கூலி கொடுக்கிறவன் சத்தியசந்தனாக இருந்தாலும் தொழிலாளியின் தன்மையறிந்து எப்படி ஏமாற்றி வேலை வாங்கவேண்டுமென்று யோசிக்கவேண்டும். இருவரும் அசத்தியவாதிகளாக இருந்துவிட்டாலோ, யார் மிகத் தேர்ந்தவன் என்ற போட்டியிலிறங்கவேண்டும். இதன் பலன், கடைசி வரையிலும் நிம்மதியின்றி உழலுவது! அப்படிக்கின்றி ஒருவன் எப்பொழுதும் சத்தியத்திற்குக் கட்டமைப்பட்டவனாகவே யிருந்தால் தன் உழைப்பினால் பிழைக்க முடியாதா? முடியும். கொஞ்சம் திருப்தி இருந்துவிட்டால், அதாவது நிஷ்காம்ய கர்மத்தினால், பாச பந்தங்களற்ற வாழ்க்கையினால், நிம்மதியைப் பெற்றிருப்பான். அவன் ஏமாற்றப்படமாட்டான். ஏனென்றால் அவன் ஏதொன்றையும் எதிர்பார்க்க வில்லை. அவனைப் பார்த்து, "ஐயோ பாவம், எல்லோரும் அவனை ஏமாற்றி விடுகிறார்களே!" என்று அங்கலாய்ப்புப்படுகிறீர்களோ? படுங்கள். உங்கள் முதலைக் கண்ணீர் யாருக்குவேண்டும்? உங்களைப் பற்றினவரையிலுமாவது அவனை ஏமாற்றாமல் அவனுடன் வியவகாரங்களில் ஈடுபட்டுப் பாருங்கள். "சீ, இந்தப்பழம் புளிக்கும்!" என்று சொல்லும் நிலையிலிருக்கமாட்டீர்கள். உங்களுக்கும் சிறிது சத்திய யுகத்தின் அனுபவம் கிட்டும்.

இதைத்தான் மகாத்மாக்கள் ராம ராஜ்யம் என்று புகழ்கிறார்கள். இதை அடையத்தான் உலக ஞானிகள் அல்லும் பகலும் உழைக்கிறார்கள்; கருணையினால் உலகினருக்குப் புகட்டுகிறார்கள். விழலுக்கிறைத்த நீர் என்று எண்ணுவதில்லை. ஏன்? சத்தியம் உயிருள்ளவைகளின் தர்மம். இதை இழந்து உயிர் நிலைக்காது. அதனால்தான் இவ் அசத்திய மாயையில் ஆழப்பதிந்தும் இன்னமும் வியவகாரங்கள் உலகத்தில் நம்பிக்கையின் பேரில் நடைபெறுகிறது. சொன்ன சொல்லில் நம்பிக்கையற்றவர்கள் எழுத்தை நம்புகிறார்கள். தனியொருவரின் வார்த்தையிலோ, எழுத்திலோ நம்பிக்கையற்றவர்கள் ஒரு கூட்டத்தினரின் அல்லது துரைத்தனத்தாரின் சத்தியத்தை நம்புகிறார்கள். இன்னும் சிறிது யோசித்துப் பாரும். ஊர்வன, நடப்பன, பறப்பன, நீரில் வாழ்வன முதலிய பல உயிருள்ளவைகள் நமக்குப் பெருந் தீங்குகள் இழைக்கச் சக்தி வாய்ந்தவை என்று தெரிந்திருந்

தும் திறந்த வெளியில் நிம்மதியாகத் தூங்கவில்லையா? ஏன்? எல்லாவற்றிலும் கலந்து நிற்கும் சத்தியத்திலுள்ள நம்பிக்கையல்லவா? இவ்வித நம்பிக்கை தான் சத்தியயுகம் இருக்கிறது என்பதற்கு அத்தாட்சி.

இச்சத்திய யுகத்தைப் பிரத்தியக்ஷத்தில் புலனுக்குச் சக்திக்கு இயன்றவாறு பாடுபடுங்கள். உங்கள் மனத்தினுள் சுற்றும் காலசக்கரத்தை நிறுத்தப் பாடுபடுங்கள். கட்டாயம் சக்கரமும் அசைவற்று நிற்கும் நிலையைக் காண்பீர்கள். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று சொல்லுவீர்கள்.

ப:—வாஸ்தவமான விஷயம். அனுபவித்து ஆனந்திக்கவேண்டும்.

# சூரிய களங்கங்கள்

[டி. பி. நவநீதகிருஷ்ணன், அண்ணாமலைநகர்]

சூரியனானது வெண்ணிற ஜோதியுடன் பிரகாசிக்கும்போது, அதை நேரே பார்க்கக் கண் கூசுகிறது. சூரியனது மேற்பரப்பு முழுமையும் ஒளிமயமாகவே கண்ணில் படுவதால், அது மேடு பள்ளங்களின்றி, சமமாயுள்ளது என நினைக்கிறோம். ஆயினும், சீனக்காரர் சிலர் எவ்வகையான கருவியின் துணையுமின்றி, சூரியனது மேற்பரப்பில் கறுவலான பொட்டுகள் சில உள்ளன என்பதை எவ்வாறாகவோ கி. பி. 301-ம் ஆண்டில் கண்டுபிடித்தார்கள். இங்ஙனம், சூரிய முகத்தில் காணப்படுகின்றனவான 'மச்சங்கள்', 'சூரிய களங்கங்கள்' (ஸன் ஸ்பாட்ஸ்) எனப்படுகின்றன.

சீனக்காரர், அவையுள்ளன என்பதைக் கண்டுபிடித்தபின் பதின்மூன்று நூற்றாண்டுகள் கடந்தன. கலிலேயோ என்ற விஞ்ஞானப் பேரறிஞர், தாம் கண்டு பிடித்திருந்த டெலெஸ்கோப் என்ற கருவியின் துணையைக் கொண்டு அக்களங்கங்கள் சூரியனிலுள்ளதைக் கண்டார். அவற்றைப் பற்றி மேலும் ஆராய்ந்தார். அவை, சூரியனின் மேற்பரப்பில், எவ்வகையாய்ப் பரவியுள்ளன என்பதைக் காட்டுபவையான படங்களை வரைந்தார். ஆயினும், அக்களங்கங்களின் இயல்பு எது என்பதைப்பற்றிக் கண்டுபிடித்தற்கு, அவரால் இயலாது போயிற்று.

கலிலேயோவுக்குப் பின் விஞ்ஞானிகள் பலர், அக்களங்கங்களுக்கான காரணங்கள் எனப் பலவற்றைச் சொல்லி வந்தனர். ஆனால், அக்காரணங்கள் சரியானவை யென்பதைத் தக்க சான்றுகளைக்கொண்டு நிரூபித்தற்கு அவர்களால் இயலாததாயிற்று.

இந்நூற்றாண்டில், சூரியனைப்பற்றிய ஆராய்ச்சிகள் நடத்த ஆராய்ச்சி மாடங்கள் பல, இவ்வுலகில் ஆங்காங்கு நிறுவப்பட்டுள்ளன. அவ்வாறானவை, 'சூரியன்பாற்பட்ட பௌதிக விஞ்ஞான இயல் உற்றுக்காணும் பரிசோதனை நிலையங்கள்' (ஸோலார் பிஸிக்ஸ் ஆப்ஸர்வெடரிஸ்) எனப்படுகின்றன. இந்நிலையங்களில், அபூர்வமான கருவிகள் பலவுள்ளன. அவற்றின் மூலமாய், அரும் பெரும் பரிசீலனைகள் செய்யப்படுகின்றன.

விஞ்ஞானம் கண்டு பிடித்தவையான நற்சாதனங்கள் மூன்று இணைந்துள்ளதான அருங்கருவி யொன்று, அவ்வாராய்ச்சிகள் செய்தற்கெனப் பயன்படுகின்றது. அம்மேலான கருவி, டெலெஸ்கோப், ஸ்பெக்ட்ரா மீடர், போடோ கேமிரா என்பனவற்றை ஒருங்கே கொண்டுள்ளதொன்றும். அச்சாதனங்கள் ஒவ்வொன்றும், தனித்தவாறுள்ளபோதே, நுட்பமான அளவைகளைச் செய்தற்கான திறனுடன் உள்ளவை. மூன்றும் இணைந்துள்ளதான கருவி யொன்று, அதிநுட்பமான அளவைகளையும் செய்யக்கூடியதொன்றும். அவ்வாறுள்ளதான கருவிக்கு, 'பரிதியநிறமாலைப் படமெடுத்தளவி' (ஸ்பெக்ட்ரோஹீலியோகிராம்) என்று பெயர். அக்கருவியின் பகுதிகளில் ஒன்றான டெலெஸ்கோப்பினால், சூரியப் பரப்பின் சிறுபகுதி யொன்றின் பிம்பம் பெறப்படுகின்றது. அப்பிம்பத்தினின்று வெளிப்படும் ஒளியானது, ஸ்பெக்ட்ரா மீடரிலுள்ள ஸ்லிட்டின் வழியே செல்கின்றது. அவ்வொளி, அதற்கென்றான நிறமாலையை (ஸ்பெக்ட்ரத்தை)த் தருகின்றது. அந்நிறமாலையினின்று, ஒரு நிறமான ஒளி

மட்டும், இரண்டாவது ஸ்லிட் ஒன்றின் வழியே செல்கின்றது. அவ்வாறான ஒளி, போட்டோ கேமிராவுக்குள் போகின்றது. இரண்டாவது ஸ்லிட், நிலைப்பானதாயிருக்கும். ஸ்பெக்ட்ராமீடரிலுள்ள முதலாவது ஸ்லிட், பிம்பத்தினின்று ஒளி வருகின்றதான திசைக்குக் குறுக்கு வாட்டமாய், நகர்ந்துகொண்டே செல்லுமாறு, அமைக்கப்படும். ஸ்லிட்டானது நகர்வதற்கென ஸ்பெக்ட்ராமீடரும் நகர்ந்து செல்லுமாறு அமைக்கப்படும். இவ்வாறான 'ஒன்று கூட்டுப் பொருத்தல்' (அஸெம்ப்ளி) சிறப்பானதொன்றும். அதில், பல விசேஷங்கள் உள்ளன. டெலெஸ்கோப் வழியே பெறப்படுகின்ற சூரிய பிம்பமானது, மிகவும் பிரகாசத்துடன் உள்ளதொன்றும். ஒளி மிக்க ஒன்றை நேரே போட்டோ பிடிப்பதினின்று கிடைக்கிற படம் தெளிவானதொன்றாயிருக்காது. அவ்வாறான படத்தைப் பரிசோதிப்பதினின்று, சூரிய பிம்பத்து நுட்பங்களைக் காண இயலாது. மேற்கூறியவாறான கருவியொன்றில், ஒரு நிற ஒளியைக்கொண்டே, படமெடுக்கப்படுகின்றது. எனவே, அப்படம் தெளிவான தொன்றாயிருக்கும். மேலும், சூரிய பிம்பத்தை முழுமையிலும் படம்பிடிப்பதினின்று, அதன் பகுதிகளில் உள்ளவையான நுட்பங்களைக் காண்டல் அரிது. ஸ்பெக்ட்ரோஹீலியோ கிராப்பில், சூரிய பிம்பத்தின் சிறு பகுதிகள் ஒவ்வொன்றும் தனித்தனியானவாறு, படம் பிடிக்கப்படுகின்றன. எனவே, அப்பகுதிகள் பாற்பட்ட நுட்பங்கள், செவ்வனே காணப்படுகின்றன. இவ்வாறானமையின், அவ்வருங்கருவியின் மூலமாய், சூரிய பிம்பத்து நுட்பங்களை, நன்கு பரிசோதித்தற்கான வழியேற்பட்டது. ஸ்பெக்ட்ரோஹீலியோ கிராப் என்பதை உபயோகித்துச் செய்யப்பட்டவையான பரிசீலனைகளினின்று, சூரிய களங்கங்களைப் பற்றியுள்ளவையான விஷயங்கள் பலவற்றை ஆராய்ந்தறிய இயன்றது. ஆயினும், அக்களங்கங்கள் பாற்பட்ட விஷயங்கள் பலவற்றைப் பற்றி அறிய முடியாதுபோயிற்று. ஆதலின், விஞ்ஞானிகள் அக்கருவியைவிட மேலானவை பலவற்றை நிருமித்தவராகி, தம் ஆராய்ச்சிகளை மேலும் செய்யலாயினர். அவ்வாறான ஆராய்ச்சிகளினின்று, சூரிய களங்கங்களைப்பற்றிக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளனவான விஷயங்கள் சிலவற்றைப்பற்றி இனிக் கூறலாம்.

சூரிய களங்கங்கள் எல்லாம் ஒரே அளவானவையல்ல. அவற்றின் உருவங்களும் பலவிதமானவையே. சூரிய களங்கங்கள் பல நமது பூமியைவிடப் பெரிதானவை.

சூரிய களங்கங்கள், சூரியனது மேற்பரப்பில், அவற்றிற்கென்றான இடங்களில் நிலைப்பாயிருப்பவையல்ல. அவையுள்ள இடங்கள் மாறிக்கொண்டிருப்பவை. காலத்திற்கேற்றவாறு, அவற்றுலான தொகை யெண்ணும் மாறிக்கொண்டேயுள்ளது. ஒவ்வொரு நாளும், அவை, எவ்வளவுஎவ்வளவான வையாய் இருந்தன என, பல ஆண்டுகளாகக் கணக்கிடப்பட்டன. அவ்வாறான ஆராய்ச்சிகளினின்று முக்கியமானதொரு விஷயம் அறியப்பட்டது. அது பின்வருமாறும் : பதினோராண்டுகளாக, சூரிய களங்கத் தொகையெண்ணானது ஒருவகையில் மாறிக்கொண்டே போகின்றது; அடுத்து வருபவையான பதினோரு ஆண்டுகளாக அவ்வெண்ணனது, முன்னரான பதினோராண்டுகளாக மாறிக்கொண்டுபோனதான வகையிலேயே மீண்டும் மாறிக்கொண்டு போகின்றது. அதாவது, பதினோராண்டுகள், பதினோராண்டுகள்தோறும் அத்தொகையெண் ஒரேவாறானதாய் உள்ளது. களங்கங்களின் தொகை மாற்றமுறையின்காலச்சக்கரம்இவ்வாறு, ஒரே வகையான மாற்றமுறை மீண்டும் மீண்டும் ஒழுங்கானவாறு ஏற்படுகின்றதான முறைமைக்கு, 'மாற்றச் சக்கரம்' (சைகிள் ஆப் சேஞ்ச்) என்று பெயர். இவ்வாறானதில், வஸ்து ஒன்று, ஒருவாறான நிலைமையில் இருக்கும்போது

உள்ளதான காலநிலைக்கும், அதுவே மீண்டும் அந்நிலைமைக்கு வரும்போது இருப்பதான காலநிலைக்கும் இடைப்பட்டுள்ளதான காலப்பகுதிக்கு, 'இடைப்போது' (பீரியட்) என்று பெயர். எனவே, சூரிய களங்கங்களினது மாற்றச் சக்கரத்தின் இடைப்போது, பதினோராண்டுகளாம். (ஸன்ஸ்பாட்களின் ஸைகிள் ஆப் சேஞ்சின் பீரியட் பதினோராண்டுகளாம்.)

சூரிய களங்கங்கள் தனித்தனியானவையாய்க் காணப்படுவதில்லை. அவை, ஜோடி ஜோடிகளாகவே உள்ளன. ஜோடி ஒன்றிலுள்ளவை ஒன்றையொன்று நேர் - எதிர்முகமானவாறு சுற்றி வருகின்றன.

அக் களங்கங்களாலானவை, சூரியனின் மேற்பரப்பிலுள்ள பள்ளங்களாம் (க்ரேடர்ஸ்). அவற்றில், நீரிய (ஹைட்ரஜன்) வாயுவினாலான சுழிகள் உள்ளன. அவை, நீர்ச்சுழிகள் உள் நோக்கி இழுக்கப்படுவது போன்றே உள்வாட்டமான சுழற்சியுடன் இழுபடுகின்றன. சூரியனில் சூறாவளிகள்போன்றவையான வலிமிக்க சுழற்கள் அடித்துக்கொண்டுள்ளன. அவ்வாறான பெருஞ் சுழற்களின் மையங்களில், களங்கங்களானவையுள்ளன. அச்சுழற்கள் நிமிஷத்திற்கு நாலாயிரம் மைல்கள் என்ற வேகத்தைக்கொண்டவை. பூமியில் உண்டாவதான பெருஞ் சூறாவளியொன்று நிமிஷத்திற்கு இரண்டு மைல் என்ற வேகத்திற்கு மேலானதொன்றுடன் அடிப்பதில்லை. சூரிய களங்கங்களைச் சுற்றிலும் ஏற்படுகின்ற சூறைகளானவை மகத்தான காந்த (மாக்னடிக்) சக்தியுடன் உள்ளளன. அவை, காந்த சக்தியானவை என்று விஞ்ஞானிகள் எப்படிக் கண்டுபிடித்தார்கள் என்பதைப்பற்றிக் கொஞ்சம் சொல்லலாம்.

பூமியிலும், அவ்வப்போது, காந்த இயலான பெருங் கிளர்ச்சிகள் பல மூட்டப்படுவதனின்று, காந்தச் சுழற்கள் அடிப்பதுண்டு. அவை உண்டாகின்றனவான காலங்களைக் கவனித்துக்கொண்டு வந்தபோது, அவையும், பதினோராண்டான இடைப்பொழுது (பீரியட்) உள்ளனவென அறியப்பட்டது. சூரிய களங்கங்களின் பாற்பட்டதான இடைப்பொழுதும், பூமியில் உண்டாகின்றனவான காந்தச் சுழற்களின் பாற்பட்டதான இடைப்பொழுதும், ஒத்தவையாயிருந்ததைக் கண்டவரான விஞ்ஞானிகள், சூரிய களங்கள், காந்த சக்தியுடன் எவ்வாறாயினும் சம்பந்தப்பட்டிருக்கவேண்டும் என அனுமானித்தனர். அதன்பின், ஹேல் (Hale) என்றவரான அமெரிக்க நாட்டு விஞ்ஞானப் பேரறிஞர், ஆராய்ச்சிகள் பலவற்றைச் செய்தார். தம் ஆராய்ச்சிகளினின்று, சூரிய களங்கங்கள் காந்த சக்தியுடனுள்ளவையே என்பதைச் சோதனை (எக்ஸ்பரிமெண்ட்) மூலமாய் நிலை நாட்டினார். பெருங்களங்கங்களிலுள்ள காந்தசக்தி, மூவாயிரம் காஸ் ஆனது, என அவர் கணக்கிட்டார். நமது பூமியின் காந்தசக்தியானது, அரை காஸ் [காஸ் என்பது காந்த சக்தியை அளவிடுதற்கான குறியளவு (யூனிட்)].

ஹேல், தமது ஆராய்ச்சிகளை, 'ஜீமன் விளைவு' (Zeeman Effect) என்றதை ஆதாரமாய்க் கொண்டு நடத்தி வந்தார். 'ஜீமன் விளைவு' என்பதானது, காந்தசக்தியும் ஒளியும் எவ்வாறான தொடர்பு கொண்டுள்ளன என்பதைப்பற்றிக் கூறுமொன்றாம். அதனைப்பற்றிச் சுருக்கமாய்க் கூறலாம். சாதாரண உப்பானது(ஸோடியம்க்ளோரைட்) ஆவியாய் மாறினதாகி, அனலிடையுள்ளபோது, அது தனக்கென்றானதொரு நிறமாலை (ஸ்பெக்ட்ரம்)யை விளைவிக்கின்றது. அந்நிறமாலை, இருண்டதான பின் இடத்தினிடையுள்ள மஞ்சள்கோடுகள் இரண்டினாலானது. சோடிய உப்பைக் கொண்டுள்ளதான அனலினின்று வருகின்ற ஒளியை, ஸ்பெக்ட்ராமீடரால் நோக்கும்போது, நிறமாலைக்கோடுகள் தென்படுகின்றன. ஒளி வருகின்ற வழியில், வலி மிக்க காந்தச் சட்டங்களை வைத்தேமாயின், அவ்வொளியானது,

அதிகமான சக்தியுடனுள்ள காந்த மண்டலத்திற்கு உட்படுத்தப் படுகின்றது. அவ்வாறான காந்த மண்டலத்தினூடே வருகின்ற ஒளியை, ஸ்பெக்ட்ராமீடரின் வழியே காணும்போது, நிறமாலைக் கோடுகள் ஒவ்வொன்றும், இரண்டிரண்டாய் ஆனவாறாயாவது, மும்மூன்றாய் ஆனவாறாயாவது தென்படுகின்றன. புதிதாய்த் தோன்றின கோடுகள் முன்பிருந்தவையான கோடுகளினின்றுள்ள தூரங்கள், காந்த சக்தியின் அளவைப் பொறுத்தவாறு யிருப்பன. எனவே, கோடுகளின் விலக்கத்தை, அளவிடுவதினின்று, காந்த சக்தியின் அளவென்ன என்பதைக்கணக்கிடலாம். ஒளியானது காந்தசக்திக்கு உட்பட்டபோது, அவ்வொளிக்கான நிறமாலைக் கோடுகள், பிரிந்து விலகுகின்றனவென்பதே 'ஜீமன் விளைவு' எனப்படுகின்றது. சூரிய களங்கங்களின் பிம்பங்களினின்று வந்ததான ஒளியை ஹேல் பரிசிலனை செய்தபோது, ஜீமன் விளைவுடன் இருந்ததான நிறமாலையைக் கண்டார். எனவே, அவர் சூரிய களங்கங்களில் காந்த சக்தி உள்ளது என்பதைச் சோதனைவாயிலாய்த் தெளிவுறுத்தினார். நிறமாலைக் கோடுகளின் பாற்பட்டவையான அளவைகளைச் செய்து, காந்தசக்தியின் அளவையும் கணக்கிட்டார்.

ஹேல், மேலும் ஆராய்ச்சிகள் பல செய்தார். அவற்றினின்று, சூரிய களங்க ஜோடிகளிலுள்ளவை, ஒன்றையொன்று சுற்றி வருவதற்கான காரணத்தைக் கண்டு பிடித்தார். சூரிய களங்கள் காந்த இயலானவை என ஏற்பட்டது. காந்த சக்தியானது, வடமுனைக் காந்த சக்தி, தென்முனைக்காந்த சக்தி, (நார்த் அண்ட் ஸவுத் போல்ஸ்) என்றான இருவகைகளிலுள்ளது. அவ்வாறே, சூரிய களங்க ஜோடியிலுள்ளவை ஒன்று வட இயலானதும், மற்றொன்று தென் இயலானதும் என உள்ளன. இவ்வாறான 'நேர்-எதிர்' இயலான வஸ்துக்கள் இரண்டு, ஒரு வகையான நிலைமையிலுள்ளபோது, அவை ஒன்றையொன்று சுற்றிவரும் என விஞ்ஞானிகள் நிரூபித்துள்ளனர். இம்முறையை ஒட்டி, சூரிய களங்கங்கள் ஜோடிகளாயுள்ள போது ஒன்றையொன்று சுற்றி வருகின்றன.

சூரிய களங்கங்களின் மாற்றசக்கரத்தின் இடைப்போது (பீரியட்) என ஆனதொன்றில், சூரியனின் வடவரைக்கோளத்தில்(நார்தர்ன் ஹெமிஸ்பியரில்)உள்ளனவான ஜோடிகள் ஒவ்வொன்றிலும் முறையே, தென்முனையியலான களங்கம் வடமுனையியலானதற்கு மேற்கானதாய் இருக்கும்; தென் அரைக்கோளத்திலுள்ளவை, ஒவ்வொன்றிலும் முறையே, தென்முனையியலான களங்கம் வடமுனையியலானதற்குக் கிழக்கே யிருக்கும். அடுத்ததான இடைப்போதில், அவ்வாறான நிலைமை மாறிவிடும். முன்னர், தென் அரைக் கோளத்திருந்த நிலைமை வட அரைக் கோளத்திலும், வட அரைக் கோளத்திலிருந்த நிலைமை தென் அரைக் கோளத்திலும் ஏற்படும். எனவே, சூரிய களங்கங்களின் மாற்ற சக்கரத்தின் 'இடைப்போது' இருபத்திரண்டு ஆண்டுகளானது எனக் கருதுதலே சரியாம்' என ஹேல் விளக்கமாக்கினார். மேற்கூறியவாறான, மாறுதலுக்குக் காரணம் என்னவென்பதை ஹேல் கண்டுபிடிக்கவில்லை. அதைக் கண்டுபிடித்தற்கென ஆராய்ச்சிகள் செய்து கொண்டுள்ளார். அவருக்கு இப்பொழுது வயது எழுபத்தைந்து.

களங்கங்கள், சூரியனின் மேற்பாகத்துப் பகுதிகள் மற்றவையுள்ளனவான அவ்வளவு சூடானவையன்று. அப்பாகங்களிலுள்ளதான வெப்பநிலை (டெம்பரெசர்)சுமாராக, 6000°c. சூரியகளங்கள் உள்ளதான வெப்பநிலை, சுமாராக, 4000°c. எனவே, அக்களங்கள், பலவகையான வாயுக்கள் விரிதலாகி (எக்ஸ்பாண்டாகி)க் குளிர்வதினின்று, ஏற்படுகின்ற சுழல்கள் இன்மையான இடங்களாய் அமைந்துள்ளன என எண்ணப்படுகின்றது.

சூரிய களங்கங்கள்பாற்பட்ட ஆராய்ச்சிகள், சோதனைமுறை (எக்ஸ்பெரிமெண்டல் மெதட்), சிந்தனை யறிவியல் முறை (தியரிடெகல் மெதட்) என்றன வான விஞ்ஞான முறைகள் இரண்டும், ஒருங்கே செல்வதினாலேயே, விஞ்ஞானம் சிறப்பெய்தும் என்பதை நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

# ஒரு வாய்ச் சோறு

[ஏ. ஜி. வெங்கடாச்சாரி]

அன்ன வஸ்திரத்துக்குக் குறை வில்லாத இடமாகப் பார்த்துப் பெண்களைக் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டும் என்று நம் நாட்டில் சொல்வது வழக்கம். இந்த இரண்டும் மிக மிகக் குறைந்த பட்சத் தேவைகள். யாராவது விஷமம் செய்தால் அல்லது அக்கிரமமாக நடந்து கொண்டால், "அடே பயலே! சோறு துணி இல்லாமல் அடிக்கிறேன், பார்!" என்று மிரட்டுவதுண்டு. அது மெய்யோ, பொய்யோ? இன்று நாட்டிலிருக்கும் நிலைமையைப் பார்த்தால், 'சூரியனே அஸ்தமிக்காத' பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கீழ் வாழும் மக்களில் இந்நாட்டில் இருப்பவர்கள் மட்டுமே சோற்றுக்கும் துணிக்கும் ஆலாய்ப் பறக்கிறார்கள்!

"அம்மா! ஒரு வாய்ச்சோறு போடுங்கள்" என்று ஈனசுரத்தில் கூவிக் கேட்டு வயிறு வளர்க்கக்கூடச் சக்தியில்லாமல் நெல்-களஞ்சியமாகிய வங்காளத்தில் வாரந்தோறும் ஏழைகள் பதினாயிரக் கணக்கில் மடிகிறார்கள். கல்கத்தா டாக்கா போன்ற பெரிய நகரங்களில் மட்டுமின்றி ஜில்லா, தாலூகாத் தலைநகர்களிலும், கிராமங்களிலும் பட்டினிச்சாவுகள் ஸர்வ சகஜமாய் விட்டன. உணவுத் தானியங்கள் பற்றாக் குறையாகப் போய்விட்டதால்தான் பஞ்சம் ஏற்பட்டதாகவும், வேகமாக வெளியிடங்களிலிருந்து கோதுமையும் அரிசியும் வந்துகொண்டிருப்பதால், இப்போதைய படுமோசமான நிலைமை சீக்கிரத்தில் மாறிவிடும் என்றும், வங்காள சர்க்கார், இந்தியா சர்க்கார், பிரிட்டிஷ் சர்க்கார் ஆகிய எல்லோருமே சென்ற இரண்டு மூன்று மாதங்களாக இடைவிடாமல் ஆறுதல் கூறிவந்திருக்கின்றனர். ஆனால், அவர்கள் தைரியம் கூற ஆரம்பித்த பிறகுதான் யமனோலை வங்காளத்தில் ஓய்வு, ஒழிச்சலின்றிக் கிழிந்துகொண்டிருக்கிறது!

முக்கியமான நகரங்களில் துரிதமாக உணவு தானியப் பங்கீடு அமுலுக்கு வந்துவிடுமென்று கூறுகிறார்கள். அத்துடன் கூட விலைவாசிகளின் கட்டுப்பாடு விதிகளைக் கடுமையாக்கிச் சரிவர நடத்திவைத்தால் நிலைமை புரட்சிகரமாக மாறிவிடும் என்று அதிகாரவர்க்கத்தினர் நினைக்கிறார்கள். இந்த இரண்டும் சரிவர நடந்தேறினால் ஒரு அனுகூலம் ஏற்படும். பணக்காரர்கள் தேவைக்கு அதிகமாகப் பதுக்கிவைத்துக்கொண்டு, அந்த அளவுக்குப் பொது மக்களுக்கு உணவுப் பொருள்கள் கிடைக்க முடியாதபடி செய்துவரும் அட்டூழியம் மட்டுப் படலாம். கொள்ளை லாபத்தை எதிர்நோக்கி வர்த்தகர்களும் பெரிய நிலஸ்வான்களும் தானியங்களைத் தேக்கி வைப்பது குறையலாம். இவற்றின் மூலம் பொது மக்களுக்குக் கிடைக்கக்கூடிய தானியங்களின் அளவு அதிகமாகலாம் என்பது வாஸ்தவம். ஆனால் அதன் காரணமாகப் பட்டினிச் சாவுகள் அடியோடு நின்று விடுமென்று நினைப்பதற்கு இடமேயில்லை.

வங்காளம் சம்பந்தப்பட்ட வரை எண்ணற்ற தவறுகள் தொடர்ச்சியாக இழைக்கப்பட்டதால்தான், இந்தியாவின் சரித்திரத்திலேயே கண்டிராத மிகக் கடுமையான பஞ்சம் அங்கே தாண்டவமாடுகிறது. சென்ற சில வாரங்களுக்கு முன்வரை, சர்க்கார் நிர்ணயித்த அரிசி விலையின்கீழ் ஒரு ரூபாய்க்கு அரைப்படி அரிசிதான் கிடைத்துவந்தது. இப்பொழுது அமுலிலுள்ள புது 'நியாய விலை'ப்படி முக்

கால் படிக்குமேல் கிடைக்கலாம். ஏராளமாய்ச் சரக்குகள் கிடைத்தால் கூட இந்த விலைகளைக் கொடுத்துத் தானியங்களை வாங்கிச் சாப்பிடக்கூடிய சக்தி ஏழை ஜனங்களுக்கு இல்லை. பெரிய நிலஸ்வான்களிடம் பண்ணையாட்களாக அல்லது குத்தகை தாரர்களாக உழைப்போர் ஏதோ ஒரு மாதிரியாக அரை வயிற்றைக் கழுவிக் கொள்ளலாம். ஆனால் ஏழைகளில் மிகப் பெரும் பான்மையோருக்கு, நெல் விளையும் பகுதிகளிலேயே சோறு கிடையாது. தானியங்களை வாங்குவதற்கு வேண்டிய காசு அவர்களிடம் இல்லை.

வங்காளத்தில் பத்து லட்சக் கணக்கில் ஜனங்கள் நாட்டுப் படகுகளைக் கொண்டு மீன் பிடித்து ஜீவனம் நடத்துவது வழக்கம். பர்மாவை ஜப்பானியர் 15 மாதங்களுக்கு முன் வேகமாய்க் கைப்பற்றி வருகையில், வங்காளத்தின் நாட்டுப் படகுகளுக்குக் கிராக்கி ஏற்பட்டது. அவை எதிரி வசமானால் வங்காளத்தின்மீது படையெடுப்பு சுலபமாக உருவாகலாம் என்று அஞ்சி, நஷ்ட ஈடுகொடுத்து, அவற்றை ராணுவ அதிகாரிகள் ஸ்வீகரித்துக் கொண்டார்கள். நஷ்ட ஈடுத்தொகை சில மாதங்களில் காலியாகிவிட்டது. அதற்கப்புறம் தங்கள் பிழைப்புச் சாதனங்களை இழந்துவிட்ட இந்த லட்சக்கணக்கான குடும்பங்களுக்கு லாபகரமான வேலையில்லாமற் போய்விட்டது. இவர்களுடைய போட்டியினால் வங்காளத்தின் கிராமாந்தரப் பகுதிகளில் ஏற்கெனவே மோசமாயிருந்த உழைப்பாளிகளின் விகிதங்கள் தலை குப்புறக் கவிழ்ந்துவிட்டன. நகரங்களுக்குச் சென்றாலாவது ஒரு வேளை சோறு கிடைக்கும்படியான வேலையைப் பெறலாம் என்ற எண்ணத்துடன் பெரிவாரியான மக்கள், நாட்டைவிட்டு நகரங்களுக்கு வரலாயினர். நகரங்களில் தேக உழைப்பின் மூலம் வயிறு வளர்ப்போரின் வேலை நிலைமைகள் மோசமானது ஒன்றுதான்!

இதிலிருந்து ஏற்பட்ட பயன் இம் மாதிரி சக்கர வட்டமாக ஏழைகளின் நிலைமை மோசமாகிக் கொண்டே வந்ததுதான். நாட்டில் செலாவணிப் பெருக்காலும், சர்க்காரின் மந்த புத்தியினாலும், சுயநலப் பெருச்சாளிகளின் சமூகத் துரோக நடவடிக்கைகளினாலும், வங்க மக்களில் பாதிப் பேருக்கு மேல் அபாயகரமான வேகத்தில் க்ஷீணித்து வருவதைக் காண்கிறோம். இந்த நிலைமையில் அரிசிப் பங்கீடு ஏற்படுவதால் மட்டும் நிலைமை சரிப்பட்டுவிடாது. அதனால் நிலைமை சற்றுச் சீர்திருந்த வழியேற்படலாம். அதற்குமேல் எதையும் எதிர்பார்ப்பதற்கில்லை. இது மறுக்க முடியாத உண்மை. வங்காளத்துக்கு மாத்திரமில்லாமல், தேசத்தின் எல்லாப் பகுதிகளுக்குமே இது பொருந்தும்.

இப்பொழுது ஏற்பாடாகிவரும் பங்கீடு, உண்மையிலேயே பங்கீடு ஆகாது. பங்கீட்டின் அடிப்படை என்ன? பற்றுக்குறை ஏற்பட்டிருக்கும் இந்த நெருக்கடியில் தேசத்திலுள்ள உணவுப் பொருள்களைப் பணக்காரர்களும் ஏழைகளும் தத்தம் தேவையை அனுசரித்துத் தர்ம நியாயப்படி நிரவிக்கொள்ள வேண்டும் என்பதுதான். நடைமுறையில் நாம் காண்பது அதுவல்ல. முதற்படியாக, பெரிய நகரங்களில் மட்டுமே பங்கீட்டை அமுல் நடத்துகிறார்கள்.

சென்னை நகரத்தை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். வயது வந்தவர்களுக்கு $2\frac{1}{2}$ ஆழாக்கு வீதமும், குழந்தைகளுக்கு $1\frac{1}{4}$ ஆழாக்கு வீதமும் தினசரி அரிசி "ரேஷன்" கணக்கிட்டுக் கார்டுகளை வழங்கியிருக்கிறார்கள். தேக உழைப்பாளருக்குச் சற்று அதிகமான போஷாக்கு தேவை என்பதை ஒப்புக் கொண்டு அவர்களுடைய ரேஷனை ஒரு ஆழாக்கு அதிகப்படுத்தி யிருக்கிறார்கள். அதுவரை சரிதான். ஆனால், ஏழை ஜனங்களில் எத்தனை பேர் அனுமதிக்கப்படும் அளவுக்கு ரேஷன்களை வாங்குகிறார்கள்? இதைப்பற்றிஇன்னம் புள்ளி விவரங்கள் வெளியாகவில்லை. ஆனால் தொழிலாளர் வகுப்பைச்சேர்ந்த பெரும் பான்மையோர் தங்கள் முழு ரேஷன்

களையும், ஒவ்வொரு வாரமும் அல்லது தினசரி, ஒழுங்காக வாங்குவதில்லை என்று தெரியவருகிறது. மொத்தத்தில் கணக்குப் பார்க்கும் அதிகாரிகள், ஏற்கெனவே ஜனங்கள் வைத்திருக்கக்கூடிய கையிருப்புகளே குறைவாக வாங்குவதற்குக் காரணம் என்று, முடிவுசெய்து விடுகிறார்கள். பெரும்பான்மை ஏழை ஜனங்களிடம், அனுமதிக்கப்பட்ட அளவுக்கு ரேஷனை வாங்கப் பணம் இல்லை என்பது அவர்களுக்குப் புரிவதேயில்லை. எல்லா வாழ்க்கைச் சாதனங்களின் விலைவாசிகளும் விஷம்போல் ஏறியிருப்பதால் உணவுப் பொருள்களுக்கு, அவர்கள் ஒத்திவைக்கக்கூடிய வீதாசாரம் முன்னிருந்ததைவிடச் சற்றுக் குறைவாயிருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. இந்த நிலைமையில் அவர்களுடைய வாழ்க்கை நிலைமை, ரேஷன் இருந்துங்கூட,படிப்படியாய் மோசமாய்க்கொண்டு தான் வருகிறது. விலைவாசிகள் உயர்ந்த அளவுக்கு, குறைந்த சம்பாத்தியக்காரர்களின் வருவாய் உயரவில்லை. அம்மாதிரி உயரும்படியாகச் சட்ட பூர்வமாய்ப் பார்த்துக் கொள்ளவேண்டியது தங்கள் கடமை என்பதை உலகெங்குமுள்ள எல்லா நாகரிக சர்க்காரும் யுத்த ஆரம்பத்திலேயே உணர்ந்து வேண்டுவனவற்றைச் செய்திருக்கின்றன. ஜனங்களுக்கும், இந்நாட்டில் ஆளும் பிரிட்டிஷ் சர்க்காருக்கும் நெருங்கிய தொடர்பில்லாமலிருப்பதுடன் பகையுணர்ச்சியும் இருந்து வருவதால், ஜனங்கள் விஷயமாய்க் கடமையைச் செலுத்த வேண்டும் என்பதைவிட, "உரிமைகளைக் கேட்டு அவற்றைப் பெறக் கிளர்ச்சி செய்யும் ஜனங்களின் கொட்டத்தை அடக்க வேண்டும்" என்ற இறுமாப்பு அன்னிய சர்க்காரின் ஏஜெண்டான அதிகாரவர்க்கத்திடம் ஊறிக் கிடப்பதைக் காண்கிறோம். ஆகையால்தான், நிலைமை இவ்வளவு மோசமாகும்வரை உணவுப் பிரச்னையைப் பற்றி உருப்படியான வகையில் கவனம் செலுத்தச் சர்க்கார் தவறிவிட்டனர்.

'பங்கீடு' நகரங்கள் எல்லாவற்றிலும் அமுல் நடந்தால்கூட, பரிகாரம் ஏற்படாது. பங்கீடு 'கார்டு' கணக்குப்படி நகரங்களுக்கு ஸப்ளை செய்வதற்காக, கிராமங்களைத் துருவித் தேடிக் கண் மூடித்தனமாக தானியங்களைக் கொண்டு வந்துவிட்டால், விபரீதமான நிலைமை ஏற்பட்டுவிடும். இவ்விஷயத்தில் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஒவ்வொரு கிராமத்தில் தேவைக்குப் அதிகப்படியான தானியம்மட்டுமே ஸ்வீகரிக்கப்பட வேண்டும். இல்லாவிட்டால் ஏழை மக்கள் வாங்குவதற்குப் பணமில்லாமல் நகரங்களில் 'ரேஷன்' கடைகளில் தானியங்கள் தூங்கிக்கொண்டிருக்கையில்,கிராமங்கள் பஞ்சத்துக்கு உறைவிடமாய் விடும். உண்மையான பங்கீடு என்பது நகரங்களைமட்டு மில்லாமல், கிராமங்களையும் கணக்கில் சேர்த்துக் கொண்டு வகுக்கப்பட்ட திட்டத்தின் அம்சமாகத்தானிருக்க வேண்டும். இந்த ரீதியில் பிரச்னையைப் பார்ப்போம். இப்பொழுது சென்னை நகரில் அனுமதிக்கப்பட்டுள்ள 'ரேஷன்' விதிப்படி மாகாணத்தில் எல்லோருக்கும் கிடைக்கக்கூடிய அளவுக்குத் தானியங்கள் விளைந்தால், அல்லது வேறிடத்திய இறக்குமதிகளுடன் சேர்ந்து இருந்தால் மட்டுமே, இப்போதைய அளவுக்கு நகரங்களுக்கு ரேஷன் தருவது நியாயமாயிருக்கும். கிராமங்களில் பெரும்பான்மை மக்கள் எப்பொழுதுமே அரை வயிறு சாப்பிடுகிறவர்கள். அவர்கள் இப்பொழுதும் அப்படியே இருக்கட்டுமே!—என்ற எண்ணம் அதிகாரிகளுக்கோ,மற்றவர்களுக்கோ வந்துவிடக்கூடாது. ஆனால் நகரங்களுக்குமட்டும் பங்கீடு வந்தால், அதன் விளைவாக ஏற்படும் நிலைமை வேறு விதமாக இருக்கமுடியாது.

உணவுப் பொருள்கள் அநேகமாய் வெளிநாடுகளிலிருந்து வர வேண்டியிருக்கும். பிரிட்டனில் ஜனத்தொகையில் பாதிப்பேருக்கு மேல், சமாதான காலத்தில் சாப்பிட்டதைவிடச் சிறந்த ஆகாரத்தை இப்பொழுது யுத்த காலத்

தில் உட்கொள்கிறார்கள். அவர்கள் தொழிலாளிவர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்.

சமாதான காலத்தில் இவ்வளவு போஷாக்கான உணவை வாங்குவதற்கு அவர்களிடம் போதிய பணமில்லை. நல்ல உணவுப் பண்டங்களின் விலை அதிகமாயிருந்தது. இப்பொழுது அங்கு நிலைமை என்ன?

யுத்த ஆரம்பத்தில் இருந்ததைவிடக் கால்-பங்குக்குமேல் உணவுப் பொருள்களின் விலை உயராமல் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். மற்ற வாழ்க்கைச் சாதனங்களின் விலைவாசியும், சாதாரண ஏழைத் தொழிலாளியின் சக்திக்கு மீறி உயராதபடி சட்டபூர்வமான ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள்.

இந்த அடிப்படையில் பங்கீட்டை அமலுக்கு கொண்டுவந்தார்கள். அனுமதிக்கப்படும் ரேஷனை ஒவ்வொருவரும் வாங்கி உட்கொள்வதை உத்தரவாதம் செய்யக்கூடிய அளவுக்குச் சம்பள உயர்வைச் சட்டப்படி ஏற்படுத்தினார்கள். இதன் காரணமாக, பிரிட்டிஷ் தொழிலாளி வர்க்கமே முன்னிருந்ததைவிடப் போஷாக்கான உணவை உட்கொள்கிறது. இந்நாட்டில் நிலைமை நேர்மாறாயிருக்கிறது. ஆரம்பம் முதல் வகை தொகையற்ற போக்கு; கொள்கையில்லாத நிர்வாகம்; எல்லோரும் ஆரோக்கியமாய் வாழ உரிமையுள்ளவர்கள் என்பதில் உருப்படியான நம்பிக்கையில்லாதது; அரசியல் - அதிகாரம் ஜனங்களின் இயற்கையான தலைவர்களிடம் இல்லாமை—இவையெல்லாமாகச் சேர்ந்து வாழ்க்கையைப் போஷாக்கான உணவு கிடைக்கும் உடலிலிருந்து, நரகமாக்கி விட்டன. உயிர் பிரியாமல் தப்ப என்ன செய்யலாம்?—என்பதே பெரிய விசாரமாய்விட்டது. இந்தச் சுற்றுணர்ச்சியில் இப்போதைய பங்கீடு வெறும் கேலிக்கூத்தாகவே யிருக்கிறது.

பங்கீடு இன்றியமையாதது. ஆனால் உண்மையாகவே அது பெரும்பான்மை ஜனங்களுக்குப் பயன்பட வேண்டுமானால், உணவு தானியங்களின் விலைவாசிகள் வாங்குவோரின் வருமான நிலைமைக்குப் பொருந்தியனவாக இருக்கவேண்டும். ஏழைகள் மலிவாகவும், பணக்காரர்கள் அதிகமான விலையிலும் உணவு தானியங்களை வாங்கும்படியாகச் செய்யவேண்டும். உதாரணமாக ஏழைகள் ரூபாய்க்கு 4 படியாகவும், ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேற்பட்ட வரும்படியுள்ளவர்கள் 2 படி வீதமும் அரிசி வாங்கும்படி செய்ய முடியும். அப்படிச் செய்தால்தான் ஏழைகள் இந்த நெருக்கடியின்போது வயிறாரச் சாப்பிடுவதற்கு வழியேற்படும். இதற்கு ஆட்சேபங்களைச் செய்ய முடியும். ஆனால் எந்த ஆட்சேபனையும் நியாயமாகாது என்பது மட்டும் திண்ணம். இது பெரிய பிரச்னைதான். ஆனால் இந்த வகையில் ஏதாவது செய்யத் தலைப்பட்டாலொழிய, வங்காளத்தின் கதிதான் இந்தியா பூராவுக்கும் வரும். போஷாக்கான உணவுப் பிரச்னையை இங்கு நான் கொண்டுவரவேயில்லை. பசியால் மரணம் பெருவாரியாக ஏற்படாமல் தவிர்க்க வேண்டுமானால், இப்பிரச்னையை இனியும் அசட்டை செய்யமுடியாது.

---




## பேரன் சொன்ன பழங்கதை

நவராத்திரி விடுமுறை நாள். என் பேரப்பிள்ளைக்குப் பொழுது போகவில்லை. பள்ளிக்கூடப் பாடம் படிப்பதென்றால் தூக்கம் வந்துவிடும். பாடம் படிக்க வேண்டிய அவசியமுமில்லை, தூக்கமும் வரவில்லை. அதனால் அவன் என் படுக்கையருகிலேவந்து உட்கார்ந்துகொண்டு, "தாத்தா, தாத்தா! நான் ஒரு கதை சொல்கிறேன், கேட்கிறாயா?" என்றான்.

எனக்குத் தூக்கக் கலக்கம். "எனக்கு நீ சொல்கிறதா? தாத்தா அல்லவா கதை சொல்ல வேணும்?" என்று அவனை மெல்ல விரட்டிவிடப் பார்த்தேன். பேரன் விடுவதாக இல்லை. "அதெல்லாம் அந்தக் காலத்திலே, தாத்தா! இப்போதெல்லாம் பேரப்பிள்ளைகள்தான் கதை சொல்வது; தாத்தாக்கள் கதை கேட்பது" என்றான்.

"சரி, உனக்கு என்ன கதை தெரியும்?" என்று அவனை மிரட்டினேன்.

"எத்தனையோ புதுக் கதைகள் தெரியும் எனக்கு; ஆனால் அதெல்லாம் உனக்குப் புரியாது. உனக்குத் தெரிந்த கதையையே சொல்கிறேன், பார். நான் சொல்வது புதிதாக இருக்கும்."

"எனக்குத் தூக்கம் வந்துவிட்டது. ஏதாவது சீக்கிரத்திலே சொல்லிவிட்டுப் போ" என்று சலிப்போடு சம்மதித்தேன்.

"உனக்குத்தான் தீபாவளிக் கதை தெரியுமே; நான் அதை எப்படிச் சொல்கிறேன், பார்" என்று தொடங்கிவிட்டான்.

"ரொம்பக் காலத்திற்கு முன்னாலே, துவாபர யுகம் என்று ஒரு காலம். அப்போது பகவான் கிருஷ்ணராக அவதரித்தார். பகவான் ஏன் அவதரிக்கிறார்? தெரியுமா, தாத்தா! அவர் பெண்டாட்டி, 'இந்தக் குட்டிகள் படுத்துகிற பாடு என்னால் தாங்க முடியவில்லை. அவர்களை எங்கேயாவது தொலைத்துப்போடுங்கள்' என்று கூக்குரலிடுவாள். அப்போது அவர் துஷ்டப் பயல்கள் கொட்டத்தை அடக்குவதற்காகப் பூச்சாண்டி வேஷம் போட்டுக்கொண்டு வருவார்: அப்படித்தானே? தாத்தா!" என்றான், என் முகத்தை நோக்கி. எனக்குச் சிரிப்பு வந்தது. கொல்லென்று சிரித்துவிட்டேன்.

உடனே என் பேரன், முகத்தைச் சற்று அமைதியாக வைத்துக்கொண்டு, "இதைத்தான் கீதையிலே சொல்லியிருக்கிறது - நல்லோர்களைப் பாதுகாப்பதற்கும், தீமை செய்வோர்களை அழிப்பதற்கும், தர்மத்தை நிலை நிறுத்துவதற்குமே நான் யுகந்தோறும் அவதரிக்கிறேன் என்று. நாம் எல்லோரும் பூமாதேவியின் பிள்ளைகள்தான்; என்றாலும் நாம் நல்ல பிள்ளைகளாக நடந்துகொண்டால் பூதேவிக்குப் பாரமாக மாட்டோம்! நமக்குள் பகை மேலிட்டு ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டும், ஸாதுக்களை ஹிம்ஸை செய்துகொண்டும் இருந்தால், பொறுமையே உருவெடுத்தாற்போன்ற பூமித் தாயும் அதைப் பொறுக்கமாட்டாள்; தாங்க முடியாமல் கடவுளிடம் முறையிடுவாள்!" என்று

வேதாந்தப் பிரசங்கம் செய்ய ஆரம்பித்து விட்டான்.

"என்னவோ, கதை சொல்கிறேன் என்றாய், உபந்யாஸம் செய்யத் தொடங்கி விட்டாயே?" என்று நான் குறுக்கிட்டேன்.

"தாத்தா! நீங்கள் கதை சொல்லும் போது குழந்தைகள் குறுக்கே பேசினால், என்ன சொல்வீர்கள்? 'போ, போ, நான் கதை சொல்லமாட்டேன்' என்பீர்கள் அல்லவா? நானும் அப்படிச் சொல்வேன் என்று நினைத்தீர்களோ? நான் கதையை நிறுத்தமாட்டேன்" என்று மேலே சொல்ல ஆரம்பித்தான்.

"பகவான் கிருஷ்ணாவதாரம் செய்யும்போது, அநேக ராஜாக்கள் அசுர சுபாவமுடையவர்களாக இருந்தார்கள். கிருஷ்ணருடைய மாமாவே ஒரு அசுரன்; அவன் கிருஷ்ணரைக் கொல்வதற்காகப் பல அசுரர்களை ஏவினான். குழந்தையா யிருந்தாலும் கிருஷ்ணர் அவர்களை யெல்லாம் கொன்றுவிட்டார். பிற்பாடு, மாமா - கம்ஸனையும் கொன்றுவிட்டார். அப்புறம் கம்ஸனுடைய தோழர்களான அசுர மன்னர்களையெல்லாம் போர்செய்து கொன்றுவிட்டார். அவர்களில் முக்கியமானவருள் ஒருவன் நரகாசுரன் என்னும் அரசன். அவன் ப்ராக்ஜ்யோஷம் என்னும் நகரத்திலே இருந்தான். அவன் மகா பொல்லாதவன். அவனுடைய ஊரைச்சுற்றிக் கோட்டை கொத்தளங்களை அமைத்து, பந்தோபஸ்து செய்திருந்தான். அதனால் அவனுடைய ஊருக்குள் எந்த விரோதியும் வரமுடியாது என்ற தைரியம் அவனுக்கு இருந்தது. நாட்டிலுள்ள அழகான பெண்களை யெல்லாம் தூக்கிக் கொண்டுபோய் அந்த ஊரின் மத்தியிலே யிருந்த தன் அந்தப்புரத்திலே சிறை வைத்திருந்தான். தெய்வங்களைத் தொழும் ஸாதுக்களை ஹிம்ஸை செய்து அவர்கள் 'தெய்வமே!' என்று ஏங்குவதைக்கண்டு இந்த நரகாசுரன் ஆனந்தமடைவான். தேவேந்திரனுடைய தாயார் அதிதி என்னும் கிழவி. அவளுடைய காதோலைகளை அபகரித்துக் கொண்டு வந்துவிட்டான். இதனால் தேவேந்திரனுக்குப் பெரிய அவமானமாய் விட்டது. பார்த்தான் தேவேந்திரன், 'கடவுள் எங்கே இருக்கிறார்? அவரிடம் முறையிட்டுக்கொள்ளலாம்" என்று. வானத்திலே கடவுளைக் காணவில்லை. கீழே பார்த்தான். அங்கே, நல்லவர்கள் எல்லாம் கிருஷ்ணரைச் சூழ்ந்துகொண்டு, "எங்களைக் காப்பாற்ற வந்த தெய்வமே!" என்று கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். தேவேந்திரன் உடனே ஐராவதத்தின் மீது ஏறிக்கொண்டு பூலோகத்திற்கு வந்தான்; வந்து, கிருஷ்ணருடைய காலிலே விழுந்தான்; "கடவுளே! என்னைக் காப்பாற்றவேண்டும்" என்று கதறினான். கிருஷ்ணரும், "ஆமாம்; நான் நாராயணன்; கெட்டவர்களைக் கொல்லவே அவதாரஞ் செய்திருக்கிறேன். உனக்கு யாரைக் கொல்ல வேண்டும்? சொல்லு" என்றார். "நரகாசுரனை" என்றான் இந்திரன்.

அதைக் கேட்டவுடனே, கிருஷ்ண பகவான் கருடபகவானை நினைத்தார். கருடனும் உடனே, 'அடியேன் இதோ!' என்று தன் சிறகுகளைக் கூப்பிக் கொண்டு வந்து நின்றார். "ஸத்யபாமா" என்றார் கிருஷ்ணர் "இதோ, நாதா!" என்றாள் பாமாதேவி. "கருடன்மேல் ஏறுவாய்" என்றார் கிருஷ்ணர். "நீரும் ஏறுவீர்" என்று தன் பக்கத்தில் கிருஷ்ணரையும் ஏற்றிக் கொண்டாள் பாமாதேவி. நரகாசுரனுடைய நகரத்தை நோக்கிக்கருடவிமானம் புறப்பட்டுவிட்டது.

"கருடவாஹனம் என்று சொல்லடா" என்று திருத்தினேன் பேரப் பிள்ளையை.

என்ன, தாத்தா! நீங்கள் பண்டைக் காலத்து மனுஷ்யரா யிருக்கிறீர்கள்? "கருடன் என்றால் என்ன என்றுகூட உங்களுக்குத் தெரியவில்லையே: அது ஒருவிதமான யுத்த விமானம்! பூமி மீது சென்று படை யெடுத்தால்

நரகாசுரனுடைய நகரத்திலே புக முடியாது. ஆகாச வழியாகச் சென்றால் காரியம் சுலபமாகிவிடும் என்று கண்டு கொண்டார் கிருஷ்ணபகவான். அவர், எல்லாம் அறிந்த ஸர்வக்ஞர் அன்றோ?" என்று என்னைப்பார்த்து இளநகை செய்தான். சரி, "கதையைச் சொல்லி முடி" என்று நான் சலிப்போடு சொல்லவே, அவனும் முகத்தைச் சுளித்துக்கொண்டு "உமக்குத்தான் கதை தெரியுமே. ஆகாச வழியாக அந்த ஊருக்குள்ளே போய் நரகாசுரனைக் கொன்று அதிதியின் நகையைமீட்டு இந்திரனிடம் கொடுத்து விட்டார். கதை முடிந்தது, கத்தரிக்காய் காய்த்தது!" என்று ஒரே மூச்சாகச் சொல்லி முடித்தான்.

" கதை முடிந்ததா? அந்தப் பெண்கள் என்ன ஆனார்கள்?" என்றேன்.

"அந்தப் பெண்களைப்பற்றி உமக்கு என்ன கவலை, தாத்தா? அப்படியானால் நீர்தான் சொல்லுமே? எனக்குத் தெரியாது" என்றான் சிரித்துக்கொண்டே.

" அவர்களை யெல்லாம் கிருஷ்ண பரமாத்மா கல்யாணஞ் செய்துகொண்டார்."

" எல்லாரையுமா? ஒரு ஆயிரம் பேர் இருப்பார்களா?"

" ஒரு ஆயிரமா? பதினாறு ஆயிரம்" என்று நான் சொல்லுமுன், "போங்கள் தாத்தா! என்னைப் பரிகாசஞ் செய்கிறீர்கள்" என்றான்.

" இல்லையடா, வாஸ்தவம்."

"நான் நம்பவே மாட்டேன்; புராணமெல்லாம் சுத்தக் கட்டுக்கதை."

" இல்லையடா குழந்தாய்! புராணக் கதைகளிலே யெல்லாம் ஒவ்வொரு உண்மை அமைந்திருக்கும். கிருஷ்ணாவதாரத்தின் தத்துவம் என்ன தெரியுமா, உனக்கு? கடவுள் ஒருவர்தான் புருஷர்; பக்தர் எல்லாரும் பெண்ணாய்ப் பிறந்தவர்கள்! அவர்கள் எல்லோரும் கடவுளை அடைய விரும்புகிறார்கள். கடவுளும் அவர்களை யெல்லாம் மனைவிகளாகக் கொள்கிறார்!"

" ஆனால், நரகாசுரனால் அடைக்கப் பட்டிருந்தவர்கள் பக்தர்களா?" என்றான் கண்களை மலர விழித்தவண்ணமாய்.

## ஸ்ரீ ஸரஸ்வதி பூஜை

ப்ரபஞ்சத்தின் முடிவைப்போல ஒவ்வொரு நாளின் பகலின் முடிவிலும், தாபம் ஒடுங்குகிறது. சப்தம் அடங்குகிறது. ஆனினங்களும் பறவைகளும் தத்தம் பட்டிகளிலும், கூடுகளிலும் அடங்குகின்றன. இந்தக் காலமே, சிவஸ்ரூபத்தின் அதிகார காலம். ஊரெல்லாம் பறக்கும் உள்ளமெனும் பறவையும் ஒடுங்கி சாந்த நிலையை அடையவேண்டுமென்னும் பேரானந்த அவாக்கொண்டவர்கள், இயற்கையடங்கும்போது தங்கள் உள்ளத்தையும் தம் நிலையாகிய சிவனிடத்தில் அடக்க எண்ணம் கொள்ளல், ஸஹஜமாயும், ஸுலபமாயும் ஸபலமாகிறது. இதுவே ஸந்த்யா காலத்தில் பெரியோர்கள் சிவஸ்வரூபத்தில் வயிப்பதற்குக் காரணம். கீழ்க்காற்று அடிக்கும்போது கடலில் உள்ள கப்பலோட்டும் மாலுமி மேற்றிசை நோக்கிப் புறப்படுவது ஸஹஜமும், ஸுலபமுமன்றோ? அதுபோல் உலகமெல்லாம் ஸமநிலையும், வெண்ணிறமும், சாந்தமும், தெளிவும் அடையும் பொழுது இக்குணங்களே உருவெடுத்து வந்த ஸ்ரீ ஸரஸ்வதி தேவியின் ஆராதனத்தைச்செய்து, ஸகல பக்தகோடிகளும் ஞானமும் தெளிவும் அடைவது இயற்கையாகும். —காமகோடி

## "வைகறையில் துயில் எழு"

தீர்க்காயுளுக்கு, ஸாதனமாக முதலில் நமது சாஸ்த்ரங்கள் எதை விதிக்கின்றன?

'வைகறையில் துயிலெழு' என்பதன் பொருளையே.

அதன் பொருளென்ன?

"விடியற்காலம் 4 மணிக்கு முன்னமேயே படுக்கையைவிட்டு எழுந்திரு" என்பது அதன் பொருள்.

ப்ரம்மா என்றால் பரமாத்மா. அந்த முஹூர்த்தம் பரமாத்மாவின் ஸாந்நித்யமும், சாந்தமும் நிறைந்து நிற்பது. சிலசில குணங்கள் பெருகி வளரும். மத்தியான்னத்தில் தாபமும் ஸாயங்காலத்தில் ரஜோ குணமும், முன் இரவில் காம குணமும், பின் இரவில் மோஹ குணமும் இயற்கையில் அமை

யப் பெற்றிருப்பதுபோல, ப்ராம்ம முஹூர்த்தத்திற்குப் பரமாத்மா குணமான ஞானமும், சாந்தமும் இயற்கையில் அமையப்பெற்றிருக்கின்றன. ப்ராம்ம முஹூர்த்தத்தில், பகவத்யானமும், சாஸ்திர விசாரணையும், தலைமுறை தலைமுறையாகச் செய்து வந்தவர்களுடைய ஸந்ததிகளே, (இன்று தங்களிடம் அந்த உத்தமானுஷ்டானங்கள் இல்லாமற் போனாலும்) பெரிய பரீக்ஷைகளில் முன்னணியில் நின்று தேறி வருகிறார்கள். இன்னும் நாம் சில தலைமுறைகள் ப்ராம்ம முஹூர்த்தத்தில் எழுந்திருப்பதையும், பகவத் ஸ்மரணையையும், ஆத்ம விசாரத்தையும், கைநழுவ விட்டுவிடுவோமானால், பின் ஸந்ததிகள் வரவர வெறும் மந்தர்களாகவே நிற்பர். நித்திரை என்னும் அவஸ்தையில், நாம் ப்ரம்ம ஸ்வரூபமான பரமாத்மாவிடம் நம்மை அறியாமலேயே ஒடுங்கி இருக்கின்றோம் என்று வேத வாக்கியங்கள் எல்லாம் கூறுகின்றன. விழிப்பிலும், கனவிலும், துக்கமும், ஸுகமும் கலந்தே வந்துகொண்டிருக்கின்றன. தூக்கத்தில் மாத்திரம் துக்கம் என்ற பேச்சே இல்லாமல், ஆனந்தமே அனுபவிக்கப்படுகிறது. ஆனந்த ரூபியான பரமாத்மாவிடத்தில் ஒடுங்கி இருப்பதால் தூக்கம் ஆனந்த மயமாகவே நிற்கின்றது. அந்த ப்ரம்ம ஸ்வரூபத்தினின்று வெளிவரும் முஹூர்த்தமே ப்ராம்ம முஹூர்த்தம். சாந்தமும், தெளிவும் அதன் உடன் பிறந்த நல்லியல்புகள். இதர காலங்களில் பகவத் ஸ்மரணம் செய்வதைக் காட்டிலும் அக்காலத்தில் செய்வது ஆயிரம் மடங்கு அதிக சக்திவாய்ந்ததாகும்; உடனே ஸகல பாபங்களையும் போக்கக் கூடியது. அக்காலத்தில் செய்யும் சாஸ்திர விசாரணை அவ்விதமே நிலையாய் இருக்கக்கூடியது. முன் இரவில் அதிகமாக வீண்காலம் கழித்துவிட்டோமானால், நமக்கு ப்ராம்ம முஹூர்த்தம் நஷ்டமாகிவிடுகிறது. எல்லாத் துயரங்களை நீக்கும் யோகத்தைத் தருவது, "வைகறையில் துயிலெழுவது."

—காமகோடி